பொருளடக்கம்

காத்தூனே ஜன்னத்

# சுவனத்தின் பேரரசி பாத்திமா (ரலி)

வெளியீடு



# பொருளடக்கம்

பொருளடக்கம்

# என்னுரை

அன்னை பாத்திமா (ரலி) அவர்களின் வாழ்க்கை வரலாறு என்பது படிப்போர் நெஞ்சத்திலே நீங்காது இடம் பெற்று விடும் ஒரு சோக காவியம் என்றால் அது மிகையாகாது.

''இவ்வுலகம் முஃமின்களுக்கு (இறை விசுவாசி களுக்கு) சிறைக் கூடம்'' என்ற அற்புத வாசகத்திற்கு விளக்கம் தான் அன்னை பாத்திமா (ரலி) அவர்களின் சோக வரலாறு.

தந்தையாருடன் அவர்களுக்கிருந்த பாசம். ஆஹா! உலகில் வேறெவரும் கொள்ள முடியாத நேசம் அது!

''உன் கண்ணில் நீர் வழிந்தால்
என் நெஞ்சில் உதிரம் கொட்டுகிறது''

என்ற சொற்றொடருக்கு அடையாளமே அன்னை யவர்கள் தாம்.

தந்தையாருக்கு சிறு துன்பம் என்றாலும் அதனை சகிக்க முடியாமல் மகளார் துடித்தார்கள். துவண்டார்கள்.

அவர்கள் இந்த அவனியிலே வந்து அவதரித்த பொழுது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

''என் இந்த மகளார் உலகிலேயே சிறந்த பெண்ணாவார்.''

அண்ணலாரின் தீர்க்க தரிசனம் அணுவளவும் பிசகவில்லை. உண்மையாகவே ஆயிற்று.

அடக்கத்தின் சிகரமாய்த் திகழ்ந்த அவர்களைப் பற்றி சிற்றன்னையார் என்ன கூறினார்கள் தெரியுமா?

''பாத்திமா (ரலி) வைப் போல் சிறந்த பெண்ணை நான் காணவில்லை. அவர் ஏறக்குறைய தந்தையாரைப்

போன்றே பழக்க வழக்கங்களிலும் தோற்றத்திலும் காணப்பட்டார். அண்ணலாரைக் காண பாத்திமா வந்தால் நபியவர்கள் எழுந்து மகளாரின் கரத்தை முத்தமிட்டு, தாங்கள் அமர்ந்திருந்த இடத்தில் அமரச் செய்வார்கள். அதே போன்று மகளின் அழைப்பின் பேரில் தந்தையார் பாத்திமாவின் இல்லம் சென்றால், மகளார் எழுந்து தந்தையின் கரத்தில் முத்தமிட்டு, தாங்கள் அமர்ந்திருந்த இடத்தில் தந்தையாரை அமரச் செய்வார்கள்'' என்று அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியுள்ளார்கள்.

உலகில் வேறெவருக்கும் தராத உயர்ந்த இடத்தை தங்களின் உள்ளத்தில் பாத்திமா (ரலி) அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் தந்தார்கள்.

அதற்குக் காரணம் தந்தையாரை அவர்கள் முழுக்க முழுக்கப் பின்பற்றி, பொறுமையை மேற்கொண்டு அடக்கமாயிருந்ததுதான்.

அடுத்து,

பீபீ பாத்திமா (ரலி) அவர்கள் இல்லற வாழ்க்கையைத் தொடங்கியதும் பட்ட இன்னல்கள், கஷ்டங்கள் ஏராளம் ஏராளம்.

பசி பட்டினி என்றால் அது பாத்திமா (ரலி)வும் அவர்களின் குடும்பத்தினரும்தாம் என்று எண்ணுமளவிற்கு அவர்கள் உண்ண உணவின்றி வாடினார்கள், உடுத்த கிழிந்த ஆடையைத் தேடினார்கள்.

உலகில் ஏழைப் பெண்கள் படும் கஷ்டங்களனைத்தையும் அவர்களும் பட்டார்கள். இறைத்தூதரின் மகளான அவர்களுக்கோ மற்றவரைக் காட்டிலும் துன்பங்கள் அதிகமே.

இந்நிலையில், கணவரை கவனிக்க அவர்கள் தவறவில்லை. கண்மணிகளாம் ஹஸன், ஹுஸைனையும் பேணிவளர்த்தார்கள்.

இத்தகு உயர்குலப் பெண்ணரசி, சுவனத்தின் பேரரசி பாத்திமா (ரலி) அவர்கள் வாழ்க்கை வரலாற்றை எழுதும் நற்பேற்றை எனக்கு நல்கியது இறைவன் என்மீது பொழிந்த பேருருளே ஆகும்.

இது போன்று, பயன்தரும் நூல்களை தொடர்ந்து அச்சிட்டு தீன்பணி ஆற்றிவரும் தஞ்சாவூர் காஜியார் புக்டிப்போவினருக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூலைக் கண்ணுறும் அறிஞர் பெருமக்கள், இதில் ஏதேனும் குறைகாணின் அன்பு கூர்ந்து தெரிவித்தால் இன்ஷா அல்லாஹ் அடுத்த பதிப்பில் திருத்தி வெளியிட ஏதுவாகும்.

இங்ஙனம்
S. முஹம்மது பஷீர்



# சுவனத்தின் பேரரசி பாத்திமா (ரலி)

## 1. பிறப்பு

சுவனத்தின் பேரரசி (காத்தூனெ ஜன்னத்) என்று அழைக்கப்பட்ட அன்னை பாத்திமா (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் நான்காவது மகளாவார்.

அன்னை பாத்திமா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் நுபுவ்வத்திற்கு ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர் அதாவது கஃபா புனர்நிர்மாணம் செய்யப்பட்ட ஆண்டு ரமலான் பிறை 20-அன்று பிறந்தார்கள்.

அவர்கள் பிறந்த பொழுது, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் - என்னுடைய இந்த மகள் உலகப் பெண்களில் சிறந்தவராவார் - என்று கூறினார்கள்.

''பாத்திமாத்துஜ் ஜஹ்ரா'' (பிரகாசமானவர்) என்று மரியாதையுடன்அழைக்கப்பட்ட அன்னையவர்களுக்கு சித்தீகா, முபாரகா, ஸகிய்யா, ரஸிய்யா, ராலிய்யா, முஹத்ததா, தாஹிரா என்ற பெயர்களும் உள்ளன.

நபி (ஸல்) அவர்களும், அன்னை கதீஜா (ரலி) அவர்களும் பாத்திமா (ரலி) அவர்கள் மீது அளவு கடந்த அன்பு செலுத்தினார்கள். அதனால் குழந்தை பாத்திமா (ரலி) அவர்கள் நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்தார்கள். அழகே உருவெடுத்த அவர்களின் அகவை இப்பொழுது ஐந்து.

## 2. அண்ணலாரும் நபித்துவமும்

அன்னை பாத்திமா (ரலி) அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களின் நபித்துவத்திற்கு ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர் பிறந்தார்கள் என்று படித்தோம். ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள் குழந்தைப் பருவத்தினராயிருந்த

பொழுதுதான், நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கையில் அற்புதமான மாற்றங்களும், முன்னேற்றங்களும் தோன்றின.

நபி (ஸல்) அவர்கள் தங்களைத் தாங்களே கேட்டுக் கொண்டார்கள்.

நான் யார்? நான் எதற்காக இவ்வுலகிற்கு வந்தேன்? நான் வாழும் இவ்வுலகைப் படைத்தவன் யார்? சூரியனைப் படைத்தது யார்? சந்திரனைப் படைத்தது யார்? விண் மீன்களையும், அண்ட சராசரங்களையும் படைத்தவன் எவன்? இரவையும், பகலையும் ஒழுங்காக மாறி மாறி வரும்படி செய்தவன் எவன்? நான் யாரை நம்புவது? எவரை நம்பக்கூடாது? என்ற வினாக்கள் அடிக்கடி தோன்றி புயல் போல் நபி (ஸல்) அவர்களின் உள்ளத்தில் வீசத்துவங்கின.

இத்தனைக் காலம் வாணிபத்தில் ஈடுபட்டிருந்த நபியவர்கள் இப்பொழுது தனிமையை நாடினார்கள். அவர்களின் உள்ளத்தில் எழுந்த ஐயங்களுக்குச் சரியான விடைகளை அறிந்து கொள்வதே அப்பொழுது அவர்களுக்கு குறிக்கோளாயிருந்தது. இதனால் அவர்களை அறியாமலேயே கால்கள் அவர்களை எங்கோ அழைத்துச் சென்றன.

எங்கு? மனித நடமாட்டம் இல்லாத ஹிரா மலைக்குகைக்கு. உள்ளத்தில் உழன்ற வினாக்களுடன் நபி (ஸல்) அவர்கள் அக்குகையில் பல வாரங்கள் தனிமையிலிருந்தார்கள். வாரங்கள் மாதங்களாயின. பின்னர் மாதங்கள் ஆண்டுகளாகவும் மாறின. ஆக அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பல ஆண்டுகள் ஹிரா மலைக்குகையினுள் தனிமையில் அமர்ந்து தவமிருந்தார்கள்.

அவர்கள் மேற்கொண்டது கடுந்தவமாகும். நின்ற வண்ணம், அமர்ந்தவண்ணம், குப்புற விழுந்த வண்ணம் என்று பல்வேறு நிலைகளில் இருந்து தவமிருந்தார்கள்.

தவத்தினூடே சில வேளைகளில் இல்லத்திற்கும்

வருவதுண்டு. எவரிடமும் அதிகம் பேசமாட்டார்கள். தங்களைச் சூழ்ந்துள்ளவர் எவர் என்ற நினைவும் இருக்காது.

உறக்கம் மேற்கொண்டால், அற்புதமானதும், அபூர்வமானதுமாகிய கனவுகள் தோன்றும். நாளடைவில் நபி (ஸல்) அவர்கள் பொன்னுடல் இளைத்தார்கள்.

அவர்களின் கனவில் மிகப் பெருத்த உருவம் ஒன்று அடிக்கடி தோன்றி மறைந்தது.

ரமலான் மாதம் வந்தது. ஹிரா மலைக்குகையின் இருளில் நபி (ஸல்) அவர்கள் தனியே தவம் மேற்கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஒளி வடிவமான பிரமாண்டமான உருவம் ஒன்று அவர்களின் முன் நின்று கொண்டிருந்தது. கனவில் தோன்றிய உருவம் அதுதான். இப்பொழுது நேரில் தோன்றியுள்ளது.

அதைக் கண்டு நபியவர்களின் உள்ளமும், உடலும் ஒருங்கே நடுங்கலாயின. பேச நா எழவில்லை. பேச முயன்றும் பேச்சு வரவில்லை.

அப்பொழுது அவ்வுருவம் பேசியது, ஓதுவீராக! என்று உரக்கக் கூறியது.

எனக்கு ஓதத் தெரியாதே! என்றனர் நபி (ஸல்) அவர்கள். உடனே அவ்வுருவம் அவர்களை இறுகக் கட்டித் தழுவியது. ஓதுவீராக! என்று மீண்டும் கூறியது.

எனக்கு ஓதத் தெரியாதே! என்று நபியவர்கள் கூற, அவ்வுருவம் அவர்களை மீண்டும் இறுகக் கட்டித் தழுவியது. பின்னர் ஓதுவீராக! என்று மீண்டும் கூறியது.

நான் எதனை ஓதுவது? உம்முடைய இறைவனின் திருப்பெயர் கொண்டு ஓதுவீராக! அனைத்தையும் படைத்த உமதிறைவன் திருப்பெயர் கொண்டு ஓதுவீராக! ஓதுவீராக! இரத்தக் கட்டியிலிருந்து மனிதனைப் படைத்த உம்முடைய இறைவனின் திருப்பெயர் கொண்டு ஓதுவீராக! மனிதன் அறியாதவற்றையெல்லாம் அவனுக்கு அறிவித்துக்

கொடுத்த அந்த இறைவனின் திருப்பெயர் கொண்டு ஓதுவீராக என்று கூறியது.

இப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்களும்,

"இக்ரஃ பிஸ்மி ரப்பிகல்லதீ கலக

கலகல் இன்ஸான மின் அலக்

இக்ரஃ வரப்புகல் அக்ரமுல்லதீ

அல்லம பில் கலம்

அல்லமல் இன்ஸான மா மலம் யஃலம்"

என்று ஓதினார்கள். இவையே திருக்குர்ஆனில் முதன் முதலாக இறங்கிய திருவசனங்களாகும்.

மிகப்பெரிய ஒளி உருவினராய் வந்து, நபி (ஸல்) அவர்களுக்கு ஓதக் கற்பித்தவர்கள் வானவர் கோமான் ஜிப்ரயீல் (அலை) அவர்களாவர். சிறிது நேரத்தில் அவர்கள் மறைந்து விட்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் நடுநடுங்கியவாறு இல்லம் திரும்பினார்கள். பின்னர் ஹிரா மலையில் நடந்தவை அனைத்தையும் ஒன்று விடாமல் தங்கள் மனைவி கதீஜா (ரலி) அவர்களிடம் எடுத்துரைத்தார்கள். பின்னர் ஒரு கம்பளிப்போர்வைக்குள் அவர்கள் கூனிக் குறுகி படுத்துக் கொண்டார்கள்.

அன்னை கதீஜா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் கூறிய அனைத்துச் செய்திகளையும், தங்களின் பெரிய தந்தையின் மகன் வரகா இப்னு நௌஃபலிடம் கூறி ஐயத்தெளிவு பெற விரும்பினார்கள். காரணம் வரகா இப்னு நௌஃபல் முன் வேதங்களை நன்கு உணர்ந்தவரா யிருந்தார்.

அன்னை கதீஜா (ரலி) அவர்கள் வரகாவின் இல்லம் சென்று அனைத்தையும் கூறினார்கள். அதுகேட்ட அவருக்கு மயக்கமே வந்து விட்டது. முன் வேதங்களைப் புரட்டிப் பார்த்து மகிழ்ச்சிக் கூத்தாடிய அவர், "இதுவரை உலக மக்கள் எதிர்பார்த்திருந்த இறைவனின் தூதர் (நபி)

உங்களுடைய கணவர் முஹம்மதே ஆவார்.'' இறைச் செய்தியை கொண்டு வந்தவர் ஜிப்ரயீல் (அலை) ஆவார்கள் என்று கூறினார். அது கேட்ட அன்னை கதீஜா (ரலி) அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் மீதிருந்த அன்பும், மரியாதையும் அதிகமாயின.

அன்னையவர்கள், இல்லம் திரும்பினார்கள். நபியவர்களைப் பார்த்து கூறினார்கள்:

படுத்துறங்குங்கள்! தாங்கள் அதிகமாக ஓய்வு கொள்ள வேண்டும் என்று.

## *3. பாத்திமா (ரலி) இஸ்லாத்தில் இணைதல்*

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

கதீஜா இனி எனக்கு உறக்கமும் இல்லை; ஓய்வும் இல்லை. ஜிப்ரயீல் (அலை) அவர்கள் என்னிடம் மீண்டும் வந்து, மக்களை இறைவன் பக்கம் அழைக்குமாறு எனக்கு உத்திரவிட்டுச் சென்று விட்டார்கள். எனினும் நான் யாரை அழைப்பது? என் அழைப்பை யார் ஏற்றுக் கொள்வார்? இதையெல்லாம் நினைக்கும் பொழுது என்னுள்ளத்தில் ஒரே குழப்பமாகவே உள்ளது.

அது கேட்ட அன்னை கதீஜா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களை மிகவும் பரிவுடன் நோக்கினார்கள். அவர்களின் கண்களில் அன்பு பொங்கி வழிந்தது.

நபியவர்களைப் பார்த்து, காஸிமின் தந்தையே! தாங்கள் எதற்காகவும் குழப்பமடைய வேண்டாம். யாரை முதலில் இறைவன் பால் அழைப்பது? என் சொல்லை எவர் மதிப்பார்? என்றெல்லாம் தாங்கள் கலங்க வேண்டாம். என்னை முதலில் அழையுங்கள். நான் தங்களைப் பரிபூரணமாக நம்புகிறேன். வணக்கத்திற்குரிய இறைவன் ஒருவனே! தாங்களே அவனின் திருத் தூதராவீர்கள் என்று உணர்ச்சி மீக்குற்று கலிமா மொழிந்து இஸ்லாத்தில் இணைந்தார்கள் அன்னை கதீஜா (ரலி) அவர்கள்.

இவ்வாறு வரலாற்றிலேயே முதன் முதலாக இஸ்லாத்தை ஏற்று முஸ்லிமானவர் அன்னை கதீஜா (ரலி) அவர்களேயாவர். பாத்திமா (ரலி) அவர்களும் தங்களின் தாயாரின் வழியொற்றி இஸ்லாத்தில் இணைந்தனர்.

பாத்திமா (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட பொழுது அவர்கள் ஐந்து வயது சிறுமியா யிருந்தனர் என்று வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன.

## 4. என் கண்ணின் மணியே அழாதே!

அண்ணல் நபி (ஸல்) அவர்கள், குறைஷியரை இறைவன் பக்கம் அழைப்பதற்கான முயற்சிகளில் ஈடுபடத் துவங்கினார்கள்.

நாள்தோறும் அவர்கள் புனித இறை இல்லமாம் கஃபத்துல்லாஹ்விற்கு சென்றார்கள். அங்கு சென்று இறைச் செய்தியைப் பரப்பலானார்கள்.

இறைவன் ஒருவனே! அவனுக்கு இணைதுணை இல்லை; அவன் உருவமற்றவன்; அவன் மிகப்பெரியவன்; அனைத்தும் அவனால் படைக்கப்பட்டவைகளே; சர்வ சக்திகளுக்கும் அவனே அதிபதி; நன்மைகள் அவனாலேயே உண்டாவது போன்று துன்பங்களும் அவனாலேயே உருவாகின்றன. அவனைத் தவிர உள்ள எந்த பொருளுக்கும் எவ்வித சக்தியும் இல்லை என்பன போன்ற கருத்துக்கள் அடங்கிய போதனைகளை அவர்கள் கூறிக் கொண்டிருந்தார்கள்.

இவ்வாறு அவர்கள் போதித்தது அரபு நாட்டினருக்கு குறிப்பாக மக்கத்து குறைஷிகளுக்கு மிகுந்த எரிச்சலையும், ஆத்திரத்தையும் ஊட்டியது.

காரணம், அன்று வரை மண்ணாலும், கல்லாலும் செய்யப்பட்ட சிலைகளையே சக்தி வாய்ந்த தெய்வங்களாக அவர்கள் நம்பி வந்தனர்.

இன்று நபி (ஸல்) அவர்கள், ''சிலை வணக்கத்தை

விட்டொழித்து உருவமற்ற இறைவனை வணங்குங்கள்'' என்று கூறியது, குறைஷிகளுக்கு கோபத்தை உண்டாக் காமலா இருக்கும்? அவர்கள் கொதித் தெழுந்தார்கள். அதனால் அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு கொடும் இன்னல்களை இழைத்தனர். நபியவர்களைக் கொன்று விடவும் அவர்கள் துணிவு கொண்டனர்.

வழக்கம் போன்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஒரு நாள் புனித கஃபாவுக்குச் சென்ற பொழுது, அங்கு அவர்கள் அன்னை கதீஜா (ரலி) அவர்களின் பெரிய தந்தை மகன் வரகா இப்னு நௌஃபலை சந்தித்தார்கள்.

அப்பொழுது வரகா அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம், ஹிரா மலைக்குகையில் அவர்கள் கண்ட காட்சிகள் அனைத்தையும் ஒன்று விடாமல் தம்மிடம் கூறுமாறு கேட்டார்.

நபி (ஸல்) அவர்களும் அவ்விதமே கூறினர். அது கேட்ட வரகாவின் ஒளி இழந்த கண்கள் நீரைச் சிந்தின.

அவர் கூறினார், ''என்னுயிர் எவன் வசமிருக்கிறதோ அவன் மீது ஆணையாக, நீர் இறைவனால் இவ்வுலகிற்கு அனுப்பப்பெற்ற இறுதித் தூதரே ஆவீர். உம்மை மக்கள் பொய்யர் எனவும், பைத்தியக்காரரெனவும் கூறித் துன்பமிழைப்பர். ஊரை விட்டும் விரட்டியடிப்பர்''.

அது கேட்ட நபியவர்கள் திடுக்கிட்டார்கள். அவர்கள் கேட்டார்கள்.

''ஊரை விட்டு என்னை விரட்டியடிப்பார்களா?''

''ஆம் உலக மக்களுக்கு நேர்வழியை போதிக்க இறைவனால் அனுப்பப் பெற்ற தூதர்களுக்கு இம்மக்கள் துன்பமும், தொல்லையும் இழைக்காமல் இருக்க மாட்டார்கள். நான் இளைஞனாக இருக்கக் கூடாதா? நான் உயிரோடிருப்பின் வாளேந்தி அம்மக்களிடம் உமக்காகப் போரிடுவேன் என்று கூறிய வரகா, அண்ணல் நபி (ஸல்)

அவர்களைக் கட்டித் தழுவி அவர்களின் நெற்றியில் முத்தமிட்டு மகிழ்ந்தார்.

வரகா கூறியது நபியவர்களுக்கு ஒரு பக்கம் மகிழ்ச்சியைத் தந்த போதிலும், தங்களை எதிர் கொண்டுள்ள துன்பங்களை எண்ணும் பொழுது அவர்கள் உள்ளம் தளர்ந்து போனார்கள்.

துயரம் தோய்ந்த அவர்களின் முகத்தைக் காணும் போதெல்லாம், கதீஜா (ரலி) அவர்கள், அபுல் காசிம்! கவலைப்படாதீர்கள். அல்லாஹ் உங்களை ஒரு பொழுதும் கைவிடமாட்டான். நிச்சயம் உங்களுக்கு உதவி செய்வான் என்று ஆறுதல் மொழி பகர்ந்த வண்ணமிருப்பார்கள்.

தந்தையின் கவலைபடர்ந்த முகத்தையும், தளர்ச் சியையும் காணும் மகளார் பாத்திமா (ரலி) அவர்கள் தாங்களும் அழுவார்கள்.

தந்தை மீது பாத்திமா (ரலி) அவர்களுக்கிருந்த அன்போ அளவிட முடியாதது. அதே போன்று மகளார் மீது அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கிருந்த பாசமும் எல்லையற்றதாகும்.

அதனாலேயே தந்தையின் முகத்தில் படரும் கவலை ரேகைகள், மகளார் பாத்திமா (ரலி) அவர்களை மிகுந்த துயரத்திற்குள்ளாக்கின. சில வேளைகளில் தந்தையின் நிலையை எண்ணி அவர்கள் அழுவார்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வீதியில் நடந்து செல்லும் பொழுது எதிரிகள் கிண்டலும் கேலியும் செய்யத் துவங்கினர்.

ஒருவன் அவர்களைப் பார்த்து பைத்தியக்காரன் என்றும், மற்றொருவன் சூனியக்காரன் இன்னொருவன், மாயக்காரன் எனவும் கூறினர்.

சிலர் அவர்களை வாய்க்கு வந்தாற் போல் திட்டினர். சிலர் குப்பை கூளங்களையும், சேறு சகதிகளையும் அவர்கள் மீது வாரி இறைத்தனர்.

சிறுவர்களை ஏவி கல்லாலடித்தனர், நடந்து செல்லும் தடத்தில் கூரான முட்களைப் பரப்பி வைத்தனர். முட்கள் தைத்ததால் நபியவர்கள் பட்ட வேதனைகளோ விவரிக்க இயலாதது.

அபூலஹப் என்பவர் நபி (ஸல்) அவர்களின் பெரிய தந்தை ஆவார். அவரது மனைவி உம்மு ஜமீல். இவ்விருவரும் நபியவர்களுக்கு இழைத்த கொடுமைகள் வரலாற்று பிரசித்தம் ஆகும்.

காரணம் மற்ற அனைவரும் இழைத்த கொடுமைகளைக் காட்டினும் தங்களின் பெரிய தந்தையும். அவரது மனைவியும் இழைத்த கொடுமைகளே அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு மிகுந்த வேதனையைத் தந்தன.

அவர்கள் நடக்கும் பாதையில் உம்மு ஜமீல் காடுகளிலிருந்து பொறுக்கி எடுத்து வந்த முட்களைப் பரப்பி வைப்பாள். அவை நபியவர்களின் கால்களைப் பதம் பார்க்கும். இத்துன்பங்களைப் பொறுக்க இயலாமல் அவர்களின் கண்கள் தாமாகவே நீரைச் சொரியும்.

ஒரு நாள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வை வணங்குவதற்காக திருக் கஃபாவிற்குச் சென்று கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது குறைஷிகள் அவர்களைச் சூழ்ந்து கொண்டு. எங்களின் முன்னோர்கள் வணங்கி வந்த தெய்வங்களை இழிவாகப் பேசுபவர் நீர்தாமா? என்றனர்.

அதற்கவர்கள், ஆம்! நான்தான் என்று பதிலுரைத்தனர். அதுகேட்டதும் அவர்களுள் ஒருவன் தன்னுடைய மேல் துணியை அவர்களின் கழுத்தில் போட்டு முறுக்கி. அவர்களைக் கீழே தள்ளினான். அத்துடனின்றி அந்தத் துணியை மென்மேலும் அவன் முறுக்கினான்.

இவ்வுலகை உய்விக்கவும், நரகவாசிகளை சுவனவாசிகளாக மாற்றவும் வல்ல இறைவனால் அனுப்பப்

பெற்ற அண்ணல் நபி (ஸல்) அவர்களின் கழுத்து இறுகிக் கொண்டிருந்ததால், அவர்களுக்கு மூச்சுத் திணறியது.

அப்பொழுது. அங்கு எதிர்பாராவிதமாக நபியவர்களின் அருமைத் தோழர் அப்துல் கஃபா குறைஷியரிடையே புகுந்து நபி (ஸல்) அவர்களை விடுவித்தார்.

அதனால் ஆத்திரமடைந்த அக்கொடியவர்கள் அப்துல் கஃபா (அபூபக்கர் (ரலி) வை அடித்தும் தாடியைப் பிய்த்தும் துன்புறுத்தினர்.

மற்றொரு முறை நபி (ஸல்) அவர்கள் கஃபாவில் அல்லாஹ்வை வணங்கிக் கொண்டிருக்கையில், கொடியவன் அபூஜஹ்ல் குட்டி ஈன்ற ஒட்டகத்தின் குடல் கழிவுகளைக் கொண்டு வந்து அவர்களின் கழுத்திலும் தலையிலும் போட்டான். அது கண்டு அருகிலிருந்த குறைஷியரெல்லாம் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

ஆனால் தந்தைக்கு இழைக்கப்படும் இன்னல்களைத் தாங்க இயலாமல் கண்ணீர் விட்டழுதார்கள் பாத்திமா (ரலி).

அவர்களின் அழுகையைக் கண்டு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ''என் கண்ணின் மணியே பாத்திமா, அழாதே! உன்னுடைய தந்தையை இறைவன் காப்பாற்றுவான்'' என்று கூறினார்கள்.

அது கேட்ட பாத்திமா (ரலி) அவர்கள் மேலும் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தார்கள்.

''தாங்களோ எவருக்கும் எவ்விதத் தீங்கும் இழைக்காமல் தெருவில் செல்லும் பொழுது அக்கொடியவன் தங்களின் தலையில் மண்ணை வாரிக்கொட்டி விட்டானே! என்று கூறி அழுதார்கள். அவர்களின் கண்களிலிருந்து கண்ணீர் ஆறாய்ப் பெருக் கெடுத்து ஓடும்.

ஒரு முறை நபி (ஸல்) அவர்கள் கஃபத்துல்லாஹ்வில் தொழுது கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது குறைஷியர்களிடையே இருந்த உக்பா என்பவன் ஆட்டின் அசுத்தமான இளங்கொடியை நபியவர்கள் மீது போட்டான்.

இச்செய்தியை அறிந்த பாத்திமா (ரலி) அவர்கள் கண்ணீர் விட்டழுது கொண்டே ஓடினர். கஃபாவிற்குச் சென்று தங்களின் தந்தை மீதிருந்த அசுத்தங்களை எடுத்தெறிந்து விட்டு, பின்னர் தந்தையின் பொன் மேனியைக் கழுவித் தூய்மைப்படுத்தினர்.

இவ்வாறு பாத்திமா (ரலி) அவர்கள் தங்களின் தந்தையை கண்ணாகவும், கண்ணின் மணியாகவும் எண்ணி உயிர் வாழ்ந்தனர்.

## 5. பேரிழப்பு

அண்ணல் நபி (ஸல்) அவர்களை மன மகிழ்வுடன் மணந்து, கணவருக்கு நேரிட்ட அத்துணை இன்னல் களையும் பகிர்ந்து கொண்டு இஸ்லாம் வளரவும் பாடுபட்ட மாதரசி அன்னை கதீஜா (ரலி) அவர்களின் இறுதி நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது.

அண்ணலாரின் பெரிய தந்தை, உயிர் வாழ்ந்திருந்தது நபியவர்களுக்கு மிகவும் உதவியாக இருந்தது. நபி (ஸல்) அவர்களைக் குறைஷியர்கள் எதிர்த்த பொழுதும், மிக்கத் துணிவுடன் அவர்களனைவரையும் எதிர்கொண்ட அபூதாலிப் இறந்து நான்கு நாட்கள் தாம் ஆகியிருந்தன. அதற்குள் நபியவர்களின் உற்றதுணைவியும் பாத்திமா (ரலி) அவர்களின் அருமைத் தாயாருமாகிய கதீஜா (ரலி) அவர்கள் நோயால் பீடிக்கப்பட்டார்கள். அப்பொழுது அவர்களின் வயது அறுபத்தைந்து ஆகும். நபி (ஸல்) அவர்கள், தங்களின் துணைவியாருக்கு பல்வேறு மருந்துகள் கொடுத்துப் பார்த்தார்கள். எனினும் நோய் தொடர்ந்தது.

அன்னை கதீஜா (ரலி) அவர்களுக்கு பல சிறப்புகள் உள்ளன. அவையாவன:

1. முதன் முதலாக ஈமான் கொண்டு முஸ்லிமானவர்.

2. தம்முடைய செல்வமனைத்தையும் நபியவர்களுக்காகவும், தீன் பிரச்சாரத்திற்காகவும் செலவிட்டவர்.

3. நபியவர்களின் முயற்சிகள் அனைத்திற்கும் உறு துணையாயிருந்தவர்.

4. பின்னர் இஸ்லாம் வளர்ச்சியடைந்ததற்கு துவக்கத்தில் அவர்கள் செய்த தியாகங்களும் காரணங்களாகும்.

5. அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு கதீஜா (ரலி) அவர்கள் மூலமே அதிக சந்ததிகள் தோன்றினர். இரு ஆண்மக்கள்; நான்கு பெண் மக்கள். இரு ஆண் பிள்ளைகளும் இறந்து விட்டனர். பெண்மக்களோ நபியவர்களின் சந்ததி தழைக்க வாழ்ந்தனர்.

6. சுவனத்துப் பெண்களிற் சிறந்தோர் நால்வர் என்றும் அவர்கள் பாத்திமா, கதீஜா, ஆசியா, மர்யம் ஆகியோர் என்றும் கூறப்படுகிறது. இவர்களனைவரிலும் சிறந்தவர் பாத்திமா (ரலி) எனவும் அவர்களே பெண்களில் முதன் முதலில் சுவனம் புகுவர் எனவும், அவர்களின் பரிந்துரையின் பேரிலேயே மற்ற பெண்கள் சுவனம் புகுவர் எனக் கூறப்படுகிறது. அத்துணை சிறப்பிற்குரிய பாத்திமா (ரலி) அவர்களை ஈன்றெடுத்து சிறப்புற்றனர் அன்னை கதீஜா (ரலி) அவர்கள்.

மேற்கண்ட சிறப்புகளுக்கெல்லாம் உரியவரான கதீஜா (ரலி) அவர்கள், இப்பொழுது படுத்த படுக்கையில் இருந்தார்கள்.

அவர்கள் நோயுற்றதற்கு மற்றொரு காரணமுண்டு அதாவது, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் எதிரிகளால் துன்புறுத்தப்பட்ட பொழுதெல்லாம் அன்னை கதீஜா (ரலி) அவர்களின் உள்ளமும் பாதிப்படைந்தது.

கணவர் பட்ட வேதனைகள் அவரை அலைக் கழிக்காமல் இருக்குமா என்ன? இவைகளே அவர்களை

நோயாளியாக மாற்றியது என்றும் கூறலாம்.

அன்னையாரவர்கள் படுக்கையில் இருந்தார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் ஏகத்துவப் பிரச்சாரத் தினால் உறவினர்களுக்கிடையே விரிசல் தோன்றியது. இதனால் நோயாளியான அவர்களுக்கு அருகிருந்து ஆறுதல் கூற உறவினர்களும் ஒதுங்கியே இருந்தனர்.

இந்நிலையில் அன்னை கதீஜா (ரலி) அவர்களின் கவலை என்ன தெரியுமா?

அது பீபீ பாத்திமா (ரலி) அவர்களைப் பற்றியது தான்.

தமக்குப் பின்னர் பாத்திமாவை வளர்த்துக் காப்பவர் யார்? என்று அவர்கள் துயரமுற்றார்கள். அத்துடன் உலகின் எல்லாத் திசைகளிலும் நபியவர்களுக்கு எதிரிகள் உருவாகியிருந்ததும் அவர்களுக்கு மிகவும் கவலையை அளித்தது. இதனால் நாள்தோறும் அவர்களின் நிலைமை மோசமாகிக் கொண்டுவந்தது.

மரணப்படுக்கையில் இருந்த அவர்களைப் பார்ப்பதற்கு நெருங்கிய உறவினர்கள் வருவதுண்டு. அவர்கள் ஆறுதலாய் ஏதேனும் சொல்வார்கள் என்று பார்த்தால் இஸ்லாத்தைப் பற்றி கேலியும், கிண்டலும் செய்து விட்டுப் போவார்கள்.

இஸ்லாத்தில் இணைந்ததால்தான் உமக்கு இத்தகையை நிலை ஏற்பட்டது என்று இஸ்லாமிய மார்க்கத்தைப் பழித்துரைத்தார்கள்.

அத்துடன் விட்டார்களா?

இஸ்லாத்தை விட்டு நீங்கி மீண்டும் பழைய மார்க்கத்தில் சேர்ந்து விடுமாறும் அவர்கள் வற்புறுத்தினார்கள். நோயின் கொடும் பிடியைக் காட்டினும் உறவினர்களின் இந்தத் தேவையற்ற பேச்சுகளே அன்னை கதீஜா (ரலி) அவர்களுக்கு அதிகமான வேதனையை அளித்தது.

ஒரு நாள் இரவு சிறிது சிறிதாகக் கழிந்து கொண்டிருந்தது. அன்னையாருக்கு காய்ச்சல் அதிகமாகி யிருந்தது. தூக்கமும் இல்லை.

அதுதான் தங்களின் இவ்வுலக வாழ்க்கையின் இறுதி நேரம் என்று உணர்ந்து கொண்டார்கள்.

லா இலாஹ இல்லல்லாஹு

முஹம்மதுர் ரஸூலுல்லாஹி

என்ற திருக்கலிமா அவர்களின் நாவின் மூலம் வெளியாகிக் கொண்டே இருந்தது.

இரவு கழிந்து பொழுது விடிந்தது. சுவாசிப்பதில் அவர்களுக்குச் சிரமம் ஏற்பட்டது.

மரணத்தின் அணைப்பில் இருந்த அவ்வேளையில் அவர்கள் தங்களின் அருமை மகளார் பாத்திமா (ரலி) அவர்களை அருகில் அழைத்தார்கள்.

'அருகில் வா' என்றார்கள்.

கண்ணீரும், கம்புலையுமாய் அவர்கள் அன்னை யாரிடம் வந்தார்கள். உடனே அன்னையார் மகளாரை இறுக அணைத்துக் கொண்டார்கள்.

கலிமாவை விடாது மொழிந்து கொண்டே இருந்த அவர்கள், தம் மகளாரை நோக்கி, ''பாத்திமா உன்னை அல்லாஹ்வின் பாதுகாவலில் விட்டுச் செல்கிறேன் என்று மூன்று முறை கூறிய வண்ணம் அவர்களின் ஆவி பிரிந்தது.

***இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிவூன்.***

அவர்களின் மக்கள் கதறினார்கள், பாத்திமா கண்ணீர் பெருக்கில் நீந்தினார்கள். தாயாரின் இழப்பை அவர்களால் எண்ணிப்பார்க்கவும் இயலவில்லை நபியவர்களுக்கோ துணைவியாரின் இழப்பு ஈடு செய்ய முடியாததாயிருந்தது.

இனி மிஞ்சியது யாது?

அன்னை கதீஜா (ரலி) அவர்களின் பூதவுடலை

நல்லடக்கம் செய்து விட்டு திரும்பி தந்தையைப் பார்த்து பாத்திமா (ரலி) அவர்கள் கேட்டார்கள்.

''இப்பொழுது என் அன்னை எங்கே இருக்கிறார்கள்?'' சிறுவயதினரான பாத்திமா (ரலி) அவர்களின் வினா தந்தையின் உள்ளத்தையே உருக வைத்து விட்டது.

நபியவர்கள் கூறினார்கள், என் கண்ணே! அல்லாஹ்வின் பேரருள் உன் மீது உண்டாவதாக! இப்பொழுது உன் தாயார் தங்கத்தாலான அழகிய இல்லத்தில் இருக்கிறார். அது அன்னை ஆசியா, அன்னை மர்யம் ஆகியோரது இல்லங்களுக்கு இடையிலுள்ளது.

அன்னையார் இல்லாமையால் இல்லம் வெறிச்சோடிக் கிடந்தது. அது பாத்திமா (ரலி) அவர்களின் உள்ளத்தை வெகுவாக பாதித்தது.

நபி (ஸல்) அவர்கள் மகளாரை வாரியணைத்து அருமை மகளே கவலைப்படாதே! இனி உனக்கு தாயும் தந்தையுமாக நானிருப்பேன் என்று ஆறுதல் கூறினர்.

## 6. மதீனாவில் குடியேற்றம்

அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கும், இஸ்லாத்தில் இணைந்த மற்றவர்களுக்கும் மக்கத்துக் காபிர்களால் விளைந்த துன்பங்களோ எல்லை மீறிக் கொண்டிருந்தன. காபிர்கள் நபி (ஸல்) அவர்களைக் கொன்று விடவும் திட்டம் தீட்டினார்கள். அதனால் இனி மக்காவில் முஸ்லிம்களால் நிம்மதியாக வாழ முடியாது என்ற நிலை ஏற்பட்டது.

எனவே முஸ்லிம்கள் இனி வேறொரு பகுதியில் சென்று குடியேறுவதே அவர்களின் உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாவலாகும் என்ற இறுதி முடிவு உருவாயிற்று.

அப்பொழுது யத்ரிப் என்றழைக்கப்பட்ட மதீனா நகர் முஸ்லிம்களை வரவேற்று வாழ்வளிக்கவும், பாதுகாப்பு

நல்கவும் தயாராயிருந்தது.

எனவே அண்ணல் நபி (ஸல்) அவர்கள் முஸ்லிம்களை சிறு சிறு கூட்டத்தினராகப் புறப்பட்டுச் சென்று மதீனாவில் குடியேறுமாறு ஆணையிட்டனர். அதன் பேரில் முஸ்லிம்கள் மக்காவிலிருந்து குடிபெயர்ந்து சென்று மதீனா நகரில் குடியேறலாயினர். இவ்வாறு மக்காவிலிருந்து முஸ்லிம்கள் தங்கள் இல்லங்களையும், நிலங்களையும், தோப்புகளையும் அல்லாஹ்வுக்காகத் துறந்து விட்டு மதீனாவில் சென்று குடியேறிய நிகழ்ச்சியே இஸ்லாமிய வரலாற்றில் ஹிஜ்ரத் என்று வழங்கப்படுகிறது.

முஸ்லிம்களில் பெரும்பாலோர் மதீனாவில் சென்று குடியேறி விட்டனர். நபி (ஸல்) அபூபக்கர் (ரலி), அலீ (ரலி) ஆகியோரும் அவர்களின் குடும்பத்தினர் மட்டுமே மக்காவில் இருந்தனர்.

அபூபக்கர் (ரலி) அவர்களை நபி (ஸல்) மதீனாவுக்குச் சென்று விடுமாறு பணித்தனர். எனினும் அபூபக்கர் (ரலி) அவர்கள், மக்கத்துக் காபிர்களால் நபியவர்களுக்குத் துன்பம் நேரிடலாம் என்று அஞ்சி மதீனாவிற்குச் செல்ல மனம் இல்லாதவராகவே இருந்தனர். ஆனால் பயணத்திற்காக வேண்டி இரண்டு ஒட்டகங்களை அவர்கள் வளர்த்து வந்தனர்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களோ மதீனாவிற்குப் புறப்படத் தயாராயிருந்தனர். எனினும் அல்லாஹ்விடமிருந்து அதற்கான ஆணை வரவேண்டும் என்று அவர்கள் எதிர் பார்த்தவர்களாயிருந்தனர்.

வந்து விட்டது இறை ஆணை!

''நபியே! மதீனாவிற்குப் புறப்பட்டுச் செல்வீராக'' என்ற இறைச் செய்தி ஒரு நாளிரவில் நபி (ஸல்) அவர்களுக்கு வந்தது.

மறுநாள் நண்பகல் வேளையில் நபி (ஸல்) அவர்கள் அபூபக்கர் (ரலி) அவர்களின் இல்லத்திற்குச் சென்றார்கள்.

அது பற்றி அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுவதை நாமும் கேட்போம்.

எப்பொழுதும் நபி (ஸல்) அவர்கள் காலையிலோ அல்லது மாலையிலோ தான் எங்கள் இல்லத்திற்கு வருவார்கள். ஆனால் அன்று நண்பகல் வேளையில் வந்தார்கள். மக்காவிலிருந்து மதீனாவிற்கு ஹிஜ்ரத் செய்ய அல்லாஹ் அனுமதி வழங்கிய செய்தியை எனது தந்தையிடம் கூறினார்கள். அதுகேட்ட என் தந்தை அப்பயணத்தில் நானும் தங்களுடன்தானே ! என்றார்கள். நபி (ஸல்) அவர்கள் ஆம் என்றார்கள். அது கேட்டதும் எனது தந்தையின் கண்கள் ஆனந்த நீரைச் சொரிந்தன.''

அவ்விருவரின் பயணம் இரவில் துவங்கியது. அன்னை ஆயிஷா (ரலி) அவர்களும் அவர்களின் தமக்கை அஸ்மா (ரலி) அவர்களும் பயணத்திற்குத் தேவையான உணவு வகைகளைத் தயார் செய்தனர்.

நபி (ஸல்) அபூபக்கர் (ரலி) ஆகிய இருவருக்கும் அவ்வுணவு மூன்று நாட்களுக்குப் போதுமானதாயிருந்தது. அவ்வுணவை கட்டுவதற்கு கயிறு ஏதும் கிடைக்காததால், அஸ்மா (ரலி) அவர்கள் தங்களின் இடுப்புத் துணியைக் கிழித்து முறுக்கிக் கட்டினர்.

தங்களின் இரண்டு ஒட்டகங்களில் ஒன்றை அபூபக்கர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்குக் கொடுத்தனர். அன்பளிப்பாக அதனை ஏற்க மறுத்த நபியவர்கள் அதற்கான கிரயத்தை மிகவும் வற்புறுத்தி அபூபக்கர் (ரலி) அவர்களுக்குக் கொடுத்து விட்டனர்.

இப்பொழுது இருவரும் மக்காவை விட்டுக் கிளம்பி விட்டனர். குறைஷியர்களோ வாளேந்தியவர்களாக இவ்விருவரையும் தேடி அலைந்து கொண்டிருந்தனர்.

நபி (ஸல்) அவர்களும், அபூபக்கர் (ரலி) அவர்களும் மக்காவிலிருந்து மூன்று மைல் தொலைவிருந்த தௌர் என்னும் குகையில் சென்று பதுங்கி இருந்தனர்.

அதன் பின்னர் ஒன்பது நாட்கள் பயணம் செய்து மிக்கச் சிரமத்துடன் இருவரும் மதீனா வந்து சேர்ந்தனர். இவ்வேளையில் அவ்விருவரின் குடும்பத்தினர் மக்காவிலேயே இருந்தனர். அவர்களுக்குப் பாதுகாவலராக அபூபக்கர் (ரலி) அவர்களின் மகனார் அப்துல்லாஹ் இப்னு அபூபக்கர் (ரலி) அவர்களிருந்தனர்.

அண்ணல் நபி (ஸல்) அபூபக்கர் (ரலி) ஆகிய இருவரும் மதீனாவுக்கு வந்த பொழுது அவர்களுக்கு அப்துல்லாஹ் இப்து அரீகத் என்பவர் வழிகாட்டியாக உடன் வந்தார்.

மதீனாவிற்கு வந்தவுடன் நபி (ஸல்) அவர்கள் அவரையும் ஜைது இப்னு தாபித் (ரலி) அபூராபிஃ (ரலி) ஆகிய இருவரையும் அனுப்பி மக்காவிலிருந்த தங்களின் குடும்பத்திரையும், அபூபக்கர் (ரலி) அவர்களின் குடும்பத்தினரையும் மதீனாவிற்கு அழைத்து வருமாறு பணித்தனர்.

அம்மூவரும் சேர்ந்து நபி (ஸல்) அவர்களின் மனைவியராகிய அன்னை ஸவ்தா (ரலி), அன்னை ஆயிஷா (ரலி) ஆகியோரையும், நபியவர்களின் இரு பெண்மக்களாகிய ஹஜ்ரத் உம்மு குல்தூம் (ரலி) பீபீ பாத்திமா (ரலி) ஆகியோரையும், அபூபக்கர் (ரலி) அவர்களின் மனைவி உம்மு ரூமான் (ரலி) மகள் அஸ்மா (ரலி) ஆகியோரையும் அழைத்துக் கொண்டு மதீனாவிற்குப் பயணம் துவங்கினர்.

பயணத்தின் பொழுது அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் ஒட்டகம் அடங்காமல் தறிகெட்டு ஓடியது. அதனால் அவர்கள் கீழே விழுந்து விடுவார்களோ என்று அவர்களின் தயாார் உம்மு ரூமான் (ரலி) அஞ்சி நடுங்கினார்கள். அவர்களுக்கு அழுகை பீறிட்டது. எனினும் ஆயிஷா (ரலி) அவர்களோ சிறிதும் பதற்றமின்றி ஒட்டகை மீது அமர்ந்திருந்தார்கள். பின்னர் ஒட்டகை கட்டுப் பாட்டிற்குள் கொண்டுவரப்பட்டது .

மிகச் சிரமமான இப்பயணத்திற்குப் பின்னர் அப் பெண்மணிகள் மதீனா நகருக்கு வந்து சேர்ந்தனர்.

அப்பொழுது அவர்கள் குடியிருப்பதற்கு, களி மண்ணால் கட்டப்பெற்று, மேலே கூரை வேயப்பட்ட எளிமையான வீடுகள் மதீனாவில் அவர்களுக்காகக் காத்திருந்தன.

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இல்லம் மஸ்ஜிதுன் நபவி பள்ளிவாயிலையொட்டி அமைந்திருந்தது.

அதில்தான் அவர்களின் துணைவியார் அன்னை ஸவ்தா (ரலி) பீபீ பாத்திமா (ரலி) அவர்களும் குடியிருக்க லாயினர்.

அன்னை ஆயிஷா (ரலி) ஆகியோர் மதீனாவின் புறநகர் பகுதியான ஸுன்ஹு வில் குடியேறினர்.

## *7. ஹஜ்ரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹு)*

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் பெரிய தந்தை அபூதாலிபுக்கும், அவரின் மனைவி பாத்திமாவுக்கும் நான்காவது திருமகனாய் அலீ (ரலி) அவர்கள் கி.பி. 600-ம் ஆண்டில் மக்காவில் பிறந்தார்கள்.

அலீ (ரலி) அவர்கள் பிறந்த பொழுது, அபூதாலிப் வாணிப நிமித்தமாக வெளியூர் சென்றிருந்தார். எனவே அலீ (ரலி) அவர்களின் அன்னையார் பாத்திமா தம்முடைய தந்தை அஸதுடைய பெயரையே பிள்ளைக்குச் சூட்டினார். ஆனால் பயணத்திலிருந்து மீண்ட அபூதாலிபோ பிள்ளைக்கு அலீ என்ற பெயரைச் சூட்டினார்.

அரபு நாட்டில் ஒரு முறை கடுமையான பஞ்சம் ஏற்பட்டது. அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களை வளர்ப்பதற்காகத் தம்முடைய இல்லத்திற்கு அழைத்து வந்தனர். அப்பொழுது அலீ (ரலி) அவர்களுக்கு வயது ஐந்து.

அன்றைய நாளிலிருந்து அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களுடனே இருந்து வந்தனர். அன்னை கதீஜா (ரலி) அவர்களும், அலீ (ரலி) அவர்கள் மீது மிகுந்த அன்பு செலுத்தினர். அவர்களை தங்களின் சொந்தப்பிள்ளையாய்க் கருதி மிக்கப் பாசத்துடன் பராமரித்து வந்தனர்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு நபித்துவம் கிடைத்த பின்னர், ஒவ்வொருவராக இறை மார்க்கமாம் இஸ்லாத்தில் இணைந்து வந்தனர். அன்னை கதீஜா (ரலி) அவர்களே முதன் முதலில் இஸ்லாத்தில் இணைந்தனர் என்று முன்னர் படித்தோம். அவர்கள் தாம் முஸ்லிமான பின்னர், நபியவர்களுடன் சேர்ந்து தொழுவதும், திருமறை வசனங்களை ஓதுவதுமாய் இருந்தனர்.

ஒரு நாள் இரவு ஊரும் உலகமும் உறங்கிக் கொண்டிருந்த வேளை நபியவர்களும் அன்னையாரும் உறக்கம் கொள்ளாமல் அல்லாஹ்வை வணங்கிக் கொண்டிருந்தனர்.

அங்கிருந்த இளவல் அலீ (ரலி) அவர்களுக்கோ உறக்கம் மேலிடாததால், அவ்விருவரும் அல்லாஹ்வை வாழ்த்தி வணங்கிக் கொண்டிருந்ததை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தனர்.

பின்னர் அவர்கள் வணங்கி முடித்தவுடன் அவர்களை அணுகி ''நீங்கள் இருவரும் இதுவரை என்ன செய்து கொண்டிருந்தீர்கள்? யாருக்கு முன் தலையைத் தாழ்த்தி வணக்கம் புரிந்து கொண்டிருந்தீர்கள்?'' என்று வினவினர்.

அதற்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பளிச்சென பதிலளித்தார்கள்:

அலீயே! ஒரே நாயனாகிய அல்லாஹ்வுக்கு முன்னால் தலையைத் தாழ்த்தி வணக்கம் செலுத்தினோம். என்னை அவன் தன்னுடைய தூதுவராகத் தேர்ந்தெடுத்து உலக மக்களை அவனுடைய மார்க்கத்தின் பக்கம் அழைக்குமாறு ஏவியுள்ளான். என்னுடைய பெரிய தந்தையின் மகனாரே!

நீரும் அவனின் பக்கம் வந்துவிடும்! எங்களுடன் சேர்ந்து கொள்வீராக! அவன் ஈடு இணையில்லாதவன், அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன்.

நபி (ஸல்) அவர்களின் பதிலும் விளக்கமும் அலீ (ரலி) அவர்களின் உள்ளத்தை சுண்டி ஈர்த்ததால் மறுமொழியின்றி அக்கணமே அவர்கள்,

''லாஇலாஹ இல்லல்லாஹு

முஹம்மதுர் ரஸூலுல்லாஹி''

வணக்கத்திற்குரிய நாயன் அல்லாஹ்வையன்றி வேறு யாருமில்லை. முஹம்மது அல்லாஹ்வின் திருத்தூதராவார் என்று மொழிந்து இஸ்லாத்தில் தங்களை இணைத்துக் கொண்டார்கள்.

இளைஞர்களுள் முதன் முதலில் இஸ்லாத்தைத் தழுவியவர் அலீ (ரலி) அவர்களேயாவர். அப்பொழுது அவர்களுக்கு வயது பதிமூன்று அல்லது பதினான்கு இருக்கலாம் என்று கூறப்படுகிறது.

## 8. அழைப்பும் மறுப்பும்

ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் இஸ்லாத்தைத் தழுவிய பின்னர் அண்ணலாருடனும் அன்னை கதீஜா (ரலி) அவர்களுடனும் சேர்ந்து இறைவணக்கத்தில் ஈடுபட்டனர்.

தம்முடைய மகன் அலீ இஸ்லாம் என்னும் புதிய மார்க்கத்தில் சேர்ந்ததையும், அம்மார்க்கத்திற்காக இரத்தம் சிந்தத் தயாராயிருப்பதையும் கேள்வியுற்ற அண்ணலாரின் பெரிய தந்தை அபூதாலிப் அவர்கள், அலீ (ரலி) அவர்களைத் தங்கள் வீட்டிற்கே அழைத்துச் செல்ல வந்தார்கள்.

அவர்கள் வந்த வேளை அண்ணல் நபி (ஸல்) அன்னை கதீஜா (ரலி) அலீ (ரலி) ஆகிய மூவரும் மக்கமா நகரின் அருகிலுள்ள குன்றிற்குச் சென்று இறைவணக்கம் நிகழ்த்திக் கொண்டிருந்தனர்.

அபூதாலிப், அவ்விடத்திற்கு வந்த பொழுது. அலீ (ரலி) அவர்களும் தொழுகையில் ஈடுபட்டிருந்தனர். அது கண்ட அபூதாலிப் அவர்கள் திடுக்குற்றனர்.

சினமுற்ற அவர்கள், தம்முடைய தம்பி மகனாராகிய நபி (ஸல்) அவர்களைப் பார்த்து, முஹம்மதே! இது என்ன மார்க்கம்? என்று வினவ,

அதற்கு நபி (ஸல்) அவர்கள், இது அல்லாஹ்வின் மார்க்கமாகும் நம் முன்னோரான நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் பின்பற்றிய மார்க்கமாகும் என்று பொறுமை யுடன் பதிலுரைத்தார்கள்.

அது கேட்டதும் அபூதாலிப் அவர்களின் முகத்தில் நிலவிய கோபக்குறி மறைந்தது. அவர்கள் மீண்டும் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து,அவ்வாறாயின் நீர் யார்? என்று கேட்க,

''நான் அல்லாஹ்வின் தூதர். என் அன்பிற்குரிய பெரிய தந்தையே! இம்மார்க்கத்தில் தாங்களும் சேர்ந்து கொள்ள வேண்டும் என்று நான் தங்களுக்கு அழைப்பு விடுக்கிறேன்; அதனை நாங்கள் ஏற்றுக் கொள்வீர்களாக'', என்று கூறினர் நபியவர்கள்.

அது கேட்டு மௌனமாயிருந்த அபூதாலிப் அவர்கள், பின்னர் கூறினர்:

முஹம்மதே! உம்முடைய கலப்பற்ற உயர்பண்புகளை நான் நன்கறிவேன். நீர் உண்மையாளரே என்பது எனக்குத் தெரியும். ஆயினும் நம் முன்னோர்கள் பின்பற்றிவந்த மார்க்கத்தை எவ்வாறு என்னால் துறக்க இயலும்? நீர் உம்முடைய மார்க்கத்தை பரப்பும் பணியில் அச்சமின்றி ஈடுபட்டு வாரும். உமக்கு எவரும் தீங்கிழைக்கா வண்ணம் உம்மை நான் பாதுகாப்பேன். என் மூச்சுள்ளவரை எவராலும் உமக்கு எவ்வித தீங்கும் இழைக்க இயலாது என்றனர்.

பின்னர் அவர்கள் தம்முடைய மகனை நோக்கி, ''அலீயே! வா வீட்டிற்குப் போவோம்'' என்று அழைத்தார்கள்.

அது கேட்டு அதிர்ச்சியுற்ற அலீ (ரலி) அவர்கள், 'தந்தையீர்! அது என்னால் முடியாது. நான் என் இறைவனுக்கும், அவனுடைய தூதருக்கும் பணிபுரிவதி லேயே எனது வாழ்நாட்களை கழிக்க முடிவு செய்து விட்டேன்' என்று மிக்க உறுதியுடன் பதிலிறுத்தார்கள்.

அப்பொழுது அபூதாலிப் அவர்கள் மகனையே உற்று நோக்கினார்கள். அதனை நபி (ஸல்) அவர்கள் பார்த்தார்கள்.

பின்னர் நபியவர்கள்' ''அலீயே! நீர் விரும்பினால் உமது தந்தையுடன் சென்று வரலாம். அதனால் எனக்கு எவ்வித வருத்தமும் இல்லை என்று அலீ (ரலி) அவர்களின் தோள்களைத் தங்களின் இனிய கரங்களால் தடவியவாறு கூறினர். எனினும், அலீ (ரலி) அவர்களின் முடிவு உறுதியான தாகவே இருந்தது.

அல்லாஹ்வின் தூதர் அவர்களே! இனி நான் தந்தையுடன் போகமாட்டேன்; தங்களுடனே இருப்பேன் என்று அவர்கள் கூறினார்கள்.

மகனின் மன உறுதியைக் கண்டு கொண்ட அபூதாலிப், ''போகட்டும்! அவனை விட்டு விடும். அவன் பிடித்தால் பிடித்தது தான்''. என்று கூறிய பின்னர் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து.

முஹம்மதே அவன் உம்மிடம் இருக்கும் காலமெல்லாம் வழி தவறமாட்டான் என்று நன்கறிவேன். நீரும் அவனைத் தவறான பாதை அழைத்துப்போகமாட்டீர் என்பதும் எனக்கு தெரியும்'', என்று கூறினர்.

பின்னர் இறுதியாக மகனைப்பார்த்து. மகனே ! இனி நீ விரும்பியவாறே செய்வாயாக! என்று கூறிவிட்டுச் சென்றார்கள்.

இவ்வாறு ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் தங்களின் இளமைக் காலத்திலிருந்தே அண்ணல் நபி (ஸல்) அவர்களுடன் உற்ற துணையா இருந்தார்கள். நபியவர் களுடன் தாங்கள் இருந்தது பற்றி அலீ (ரலி) அவர்கள் ஒருமுறை குறிப்பிடுகையில்,

மற்றவர்களை விட ஏழு ஆண்டுகளுக்கு முன் பிருந்தே நான் அல்லாஹ்வின் தூதர் அவர்களுடன் தொழுதுள்ளேன்'' என்று கூறியுள்ளார்கள்.

## *9. பருவ வயதில் பாத்திமா (ரலி)*

சிறுமியாயிருந்த பாத்திமா (ரலி) அவர்கள் இப்பொழுது பருவ எய்தப் பெற்றார்கள். பன்னிரண்டு வயதினராயிருந்த அவர்களின் உருவம் அழகுக்கு அழகு சேர்ப்பதாயும், அன்றலர்ந்த செந்தாமரையாகவும் விளங்கியது.

அவர்களின் எழிலும், பொலிவும், இனிய பண்புகளும் அனைவரையும் போட்டி போடச் செய்தது என்றால் அது மிகையாகாது.

அவர்களை மணமுடித்துக் கொள்ள பலர் எனக்கு எனக்கு என்று துடியாய்த் துடித்தனர். அவர்களுள் பலர் செல்வச் சீமான்களாவர்.

ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் பாத்திமா (ரலி) அவர்களை மணமுடிக்க விழைந்தனர். அதற்காக வேண்டி ஒருவரை நபி (ஸல்) அவர்களிடம் அவர்கள் தூது அனுப்பினர்.

நபியவர்களோ, தங்களின் நெருங்கிய தோழரும், தியாகச் செம்மலும் ஆகிய அபூபக்கர் (ரலி) அவர்களுக்கு பாத்திமா (ரலி) அவர்களை திருமணம் செய்விக்க விரும்பினர். எனினும் உடனடியாக எவ்வித பதிலும் அவர்கள் அளித்து விடவில்லை. அவர்கள் கூறினர்,

சற்றுப்பொறுங்கள் இறைவனின் கட்டளைக்காக நான் காத்திருக்கின்றேன்.''

பெண் கேட்டு தூது வந்த மற்றவர்களுக்கும், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இவ்வித விடையையே கூறிக் கொண்டிருந்தனர்.

ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் பெண் கேட்டு தூதனுப்பிய பொழுது, அவர்களுக்கும் இவ்விடையே கிடைத்தது.

பின்னர் நபித்தோழர்களுள் சிலர் ஒன்று கூடி, அலீ (ரலி) அவர்களைத் தூண்டினர். அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் பாத்திமா (ரலி) அவர்களைப் பெண் கேட்டு தூது அனுப்புமாறு யோசனை கூறினர்.

அதனால் அலீ (ரலி) அவர்களுக்கோ அவ்வாறு செய்வதற்கு மனம் துணியவில்லை. காரணம் அவர்கள் மிகவும் வறிய நிலையில் இருந்ததேயாகும். நான் மிகவும் ஏழையாக உள்ளேன். எவ்வாறு அல்லாஹ்வின் தூதரிடம் சென்று பெண் கேட்பது? என்று தங்களின் ஏழ்மையை உணர்ந்து கூறினர்.

எனினும் நபித் தோழர்களின் வற்புறுத்தலின் பேரில் அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இல்லத்திற்குச் சென்றர்.

அங்கு சென்ற அவர்கள் என்றுமில்லாமல் மிகவும் நாணத்துடன் கூனிக்குறுகி ஓரிடத்தில் அமர்ந்தனர்.

அப்பொழுது நபி (ஸல்) அவர்கள், அலீ (ரலி) அவர்களைப் பார்த்து, ''அலீயே! என்ன செய்தி? என்றுமில்லாமல் இன்று தயங்கித் தயங்கி, ஒடுங்கியபடி வந்துள்ளீர்கள்?'' என்று வினவ,

அதற்கு அலீ (ரலி) அவர்கள் பேச நா எழாதவராய் மிக்க வெட்கத்துடன் ''இறைவனின் திருத்தூதர் அவர்களே! என்னிடம் தாங்கள் மகளாரைப் பற்றிக் கூறினார்கள். அவரைத் திருமணம் செய்து கொள்வது விஷயமாக பேசவே

வந்தேன்'' என்று ஒருவாறு சொல்லி முடித்து விட்டார்கள். எனினும் நபியவர்கள் யாது நினைப்பார்களோ என்ற எண்ணம் அவர்களை உச்சிமுதல் உள்ளங்கால் வரை குலுக்கிக் கொண்டிருந்தது.

ஆனால் ! அவர்கள் நினைத்ததற்கு மாறாக நபி (ஸல்) அவர்களின் அகமும் முகமும் ஒருசேர மலர்ந்தன.

மர்ஹபன்! மர்ஹபன்! என்ற வார்த்தைகள் நபியவர்களின் பவள வாயிதழ்களிலிருந்து பளிங்குப் பூக்களென உதிர்ந்தன.

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

''இது தொடர்பான இறைச்செய்தி இப்பொழுதுதான் எனக்குக் கிடைத்தது. நீர் இறை இல்லத்திற்குச் செல்லும். நான் அங்கு வந்து மற்ற விபரங்களைத் தெரிவிக்கின்றேன்.

அது கேட்ட அலீ (ரலி) அவர்கள் சோகமோ, மகிழ்ச்சியோ அற்றவராக நபித்தோழர்களிடம் வந்து சேர்ந்தனர். அனைவரும் இறை இல்லத்தில் கூடி இருந்தனர். நபித் தோழர்கள் அலீ (ரலி) அவர்களைப் பார்த்து. "அல்லாஹ்வின் திருத்தூதர் யாது கூறினார்கள்?" என்று வினவ,

மர்ஹபன்! மர்ஹபன் ! என்று கூறியதாக அலீ (ரலி) அவர்கள் விடையளித்தார்கள்.

உடனே நபித்தோழர்கள், '' அவ்வாறாயின் அவ்வார்த்தைகள் போதுமே! நபியவர்கள் உங்களைத் தங்களின் குடும்பத்தினருள் ஒருவராக ஆக்கிக் கொண்டார்கள்'' என்று கருத்துத் தெரிவித்தார்கள்.

## *10. சுவனப் பேரரசியின் திருமணம்*

பீபி பாத்திமாவைத் திருமணம் செய்து கொள்ள அலீ (ரலி) அவர்கள் விரும்பியதும், நபி (ஸல்) அவர்கள் வீட்டிற்குள் சென்று தம்முடைய அருமை மகளாரைப் பார்த்து, ''மகளே! அலீ உம்மை மணந்து கொள்ள

விரும்புகிறார்'' என்று கூறினார்கள். அதற்கு பீபீ பாத்திமா (ரலி) அவர்கள் ஏதும் கூறாமல் மௌனமாயிருந்தனர். அதுவே சம்மதத்திற்கு அறிகுறியாயிற்று... எவ்வாறெனில்

ஒரு முறை நாயகத் தோழர்கள் நபி (ஸல்) அவர்களிடம்,

அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! கன்னிப் பெண்ணிடம் எவ்வாறு (திருமணத்திற்கு) அனுமதி பெற முடியும் என்று கேட்க, அதற்கு நபியவர்கள், வாய் மூடி பேசாதிருப்பதே அவளின் அனுமதியாகும் என்று கூறினார்கள். அந்த அருள் மொழிக்கொப்ப, நபியவர்கள் மகளாரிடம் சம்மதம் கோரிய பொழுது பாத்திமா (ரலி) மௌனமாயிருந்தார்கள். அதுவே சம்மதமாகக் கருதப் பட்டது.

பள்ளிவாயிலில் திருமணத்திற்கு ஏற்பாடுகள் நடந்தன.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களைப்பார்த்து ''உமக்கு சொந்தமான பொருள்கள் ஏதேனும் உள்ளனவா?'' என்று கேட்க, அதற்கு அலீ (ரலி) அவர்கள் என்னிடம் குதிரை ஒன்றும், இரும்புக் கவசமொன்றும் உள்ளன என்றார்கள்.

அது கேட்ட நபி (ஸல்) அவர்கள், ''குதிரை உமக்கு அவசியமானது! நீர் கவசத்தை விற்றுவிடுவீராக!'' என்று கூறினர்.

பின்னர் பள்ளிவாசயிலுக்கு வந்த அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தங்களின் தோழர்களை அழைத்து அவர்களின் முன்னிலையில் தாங்களே குத்பா பிரசங்கம் ஓதித் திருமணத்தை மிக்க எளிய முறையில் நடத்தி வைத்தார்கள். கவசம் விற்றதில் கிடைத்த பணத்தை மாப்பிள்ளை அலீ (ரலி) அவர்கள், மணப்பெண் பாத்திமா (ரலி) அவர்களுக்குக் கொடுத்தார்கள்.

இந்நிகழ்ச்சியின் பொழுது ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) உமர் (ரலி) உஸ்மான் (ரலி) அனஸ் (ரலி) தல்ஹா (ரலி)

ஜுபைர் (ரலி) போன்ற பெரும் சஹாபாக்கள் கலந்து கொண்டனர்.

அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இல்லத்திற்கு வந்த நான்கு மாதங்களுக்குப் பின்னர் இத்திருமணம் நிகழ்ந்தது. அது ஹிஜ்ரி 2-ம் ஆண்டு என்று கணிக்கப்பட்டுள்ளது.

பாத்திமா (ரலி) அவர்களின் திருமணத்தின் முழுப் பொறுப்பையும் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். வீட்டிற்கு சாந்து பூசி தலையணைகளில் ஈச்ச நாறு களை நுழைத்து ஆகவேண்டிய அனைத்துக் காரியங்களையும் அவர்கள் கவனித்தனர்.

மாப்பிள்ளை அலீ (ரலி) அவர்கள் இல்லத்தில் நுழைந்த பொழுது ஆயிஷா (ரலி) அவர்கள், அவர்களுக்கு பேரீச்சம் பழமும் உலர்ந்த திராட்சையும் தந்து வரவேற்றார்கள்.

பின்பொரு முறை ஆயிஷா (ரலி) அவர்கள் குறிப்பிடுகையில்,

பாத்திமா (ரலி) அவர்களின் திருமணத்தைக் காட்டினும் சிறந்த திருமணத்தை நான் கண்டதில்லை என்று கூறினார்கள்.

திருமணத்தின் பொழுது பாத்திமா (ரலி) அவர்களுக்கு வயது பதினைந்து என்றும் பதினெட்டு என்றும் இருவிதமாக கூறப்படுகிறது. ஆனால் அலீ (ரலி) அவர்கள் அப்பொழுது இருபத்து மூன்று வயதினராக இருந்தனர்.

## *11. கணவரின் இல்லம் புகுந்த காரிகை*

பாத்திமா (ரலி) அவர்கள் கணவர் அலீ (ரலி) அவர்களுடன் இல்லற வாழ்க்கையை இனிதே துவக்கினர்.

''அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மணமக்களுக்கு சீதனப் பொருள் கொடுத்தனர். அவை என்ன தெரியுமா? மரக்கட்டில் ஒன்றும், தண்ணீர் பாத்திரம் ஒன்றும்,

வைக்கோல் நிரப்பப்பட்ட தலையணை ஒன்றும், கரிய நிறமான போர்வை ஒன்றும் ஆகும். அத்துடன் ஒரு திரிகையும் இரு குடங்களும் கொடுத்ததாகவும் கூறப்படுகிறது.

இப்படிப்பட்ட சீதனப் பொருள்களுடன் வரும் பெண்ணை நாம் மணந்து கொள்வோமா? சிந்திக்க வேண்டும்! பாத்திமா (ரலி) அவர்களின் திருமணம் மிகவும் எளிமையாக நடைபெற்ற அதே வேளையில் அதனைச் சார்ந்த அனைத்துக் காரியங்களும் எளிமையானதாகவே இருந்தன.

ஆக, அல்லாஹ்வின் அருளுக்கும், அபிவிருத்திக்கும், அன்பிற்கும் உரிய திருமணம் எதுவென்று பார்த்தீர்களா?

இதுவே உண்மையான இஸ்லாமிய (சுன்னத்தான) திருமணமாகும். இது போன்றல்லாத திருமணங்கள் இறைவனின் வெறுப்பிற்கும், கோபத்திற்கும், சாபத்திற்கும் உரிய திருமணங்களாகும் என்பதை நினைவிற் கொள்ள வேண்டும்.

மேள தாளங்கள், பாட்டுக்கச்சேரிகள், வீடியோ படங்கள், ஆண் பெண்கள் இணைந்தோ-தனித்தோ ஆடும் நடனங்கள், வெட்கங்கெட்ட நிலையில் பெண்கள் பர்தா இன்றி ஆண்கள் மத்தியில் அங்க அவயவங்கள் தெரிய மினுமினுப்புடனும் பளபளப்புடனும் திரியும் நிகழ்ச்சிகள், பெண்ணையோ, ஆணையோ, பெண்களின் கூட்டத்தினரையோ, ஆண்களின் கூட்டத்தினரையோ, வீடியோ படமெடுக்கும் அநியாயங்கள், வாழை மரத்தோரணங்கள், மின்விளக்கு அலங்காரங்கள், சேரா என்ற பெயரில் பூச்சரங்களை மாப்பிள்ளை - பெண்ணுக்கு அணிவித்தல் போன்ற நிகழ்ச்சிகள் இடம் பெறும் திருமணங்கள் முஸ்லிம்களுடையதாகவே இருப்பினும் அது இறைவனின் கடுமையான கோபத்திற்குரிய திருமணமாகும். அண்ணல்

நபி (ஸல்) அவர்களின் சுன்னத்தான வழிமுறைக்கு மாற்றமானதாகும்.

இவ்வாறு மார்க்கத்தை மதிக்காமல், மார்க்க அறிஞர்களின் கூற்றை அலட்சியப்படுத்தி மாற்று மதத்தினர் போன்று தங்களின் இல்லத்திருமணங்களை நடத்துவோரின் பின் விளைவுகள் மிக மோசமானதாகவே அமைவதைக் கண்கூடாகக் காணலாம்.

இங்கே பாத்திமா (ரலி), அலீ (ரலீ) அவர்களின் திருமணம் நடைபெற்ற நிலையைப் பார்த்தீர்களா? இத்தகையத் திருமணமே இறை அருளுக்கு உரிய திருமணமாகும்.

திருமணமான பின்னர் பாத்திமா (ரலி) அவர்கள் கணவருடன் வாழ்க்கை நடத்த தனி வீடொன்று ஏற்பாடு செய்யப்பட்டது.

அந்த இல்லத்திற்கு மணமக்கள் எவ்வித வாகனத்திலும் செல்லவில்லை. நடந்தே சென்றனர்.

மறுநாள் காலை நபி (ஸல்) அவர்கள் மகளாரைக் காண அங்கு சென்றார்கள். வெளியில் நின்று அனுமதி பெற்ற பின்னரே அவர்கள் உள்ளே சென்றார்கள்.

அலீ (ரலி) அவர்களை அழைத்தார்கள். அவர்களுக்காக துஆச் செய்தார்கள். பின்னர் பாத்திமா (ரலி) அவர்களை அழைத்தார்கள். அவர்களோ மிக்க நாணமுற்றவராய்த் தந்தையினருகில் வந்தார்கள். அவர்களுக்காகவும் நபியவர்கள் துஆச் செய்தார்கள்.

பின்னர் ''என்னருமை மகளே! என் குடும்பத்தில் உள்ள அனைவரைக் காட்டிலும் எனக்கு மிகவும் பிடித்தமான ஒருவருக்கே உம்மைத் திருமணம் செய்து வைத்துள்ளேன்'' என்று அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறியது எந்த அளவிற்கு உண்மை என்று பாருங்கள்!

அபூபக்கர் (ரலி) உமர் (ரலி) ஆகியோர் மட்டுமன்றி அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ப் (ரலி) அவர்கள் 1000 ஒட்டகை நிறைய மிஸ்ர் (எகிப்து) நாட்டுத் துணியும், 10,000 தீனாரும் மஹராகத் தந்து பாத்திமா (ரலி) அவர்களை மணமுடித்துக் கொள்ள விழைந்தனர். அதே போன்றே உதுமான் (ரலி) அவர்கள் கூறியதாகவும் வரலாற்று ஏடுகளில் குறிப்பிடப்பட்டுள்ளது.

எனினும் நபி (ஸல்) அவர்கள் இறைவனின் விருப்பப்படி தங்களின் அருமை மகளாரை பரம ஏழையான அலீ (ரலி) அவர்களுக்கே திருமணம் செய்து வைத்தனர். அத்தம்பதிகளுக்காக நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு பிரார்த்தனை செய்தார்கள். "யா அல்லாஹ்! இத்தம்பதி களிடையே அன்பை ஏற்படுத்துவயாக! உன்னுடைய பேரருளை அவர்கள் மீது சூழச் செய்வாயாக! அவர்களுக்கு சிறந்த பிள்ளைகளைத் தருவாயாக!"

## 12. வலீமா விருந்து

வலீமா விருந்து முஸ்தஹப்பானதாகும். இது அண்ணல் நபி (ஸல்) அவர்களின் சுன்னத்துகளில் ஒன்றாகும். மணமகன் திருமணத்திற்குப் பின்னர் அளிக்கும் விருந்திற்கு இப்பெயர் வழங்கப்படுகிறது.

தங்களின் திருமணத்திற்குப் பின்னர் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் விருந்தளித்தார்கள். அலீ (ரலி) அவர்கள் மிகவும் ஏழ்மையான நிலையிலிருந்தமையால், அவர்களுக்கு நாயகத் தோழர்கள் உதவி செய்தனர்.

சில அன்சாரித் தோழர்கள் ஆடுகள் கொண்டு வந்து அலீ (ரலி) அவர்களுக்குக் கொடுத்தனர். அவர்கள் பெண்ணுக்கு மஹர் கொடுத்தது போக எஞ்சியிருந்த பணத்தில் இவ்விருந்திற்கு ஏற்பாடு செய்தனர்.

இவ்விருந்தின் பொழுது பேரீச்சம்பழம், இறைச்சி, கோதுமை ரொட்டி, பால் பானம், சூப் ஆகியவை பரிமாறப் பட்டன.

இவ்விருந்தை பற்றி அபூபக்கர் (ரலி) அவர்களின் மூத்த மகளார், அஸ்மா (ரலி) அவர்கள் குறிப்பிடுகையில் இக்காலத்தில் இதைக் காட்டினும் சிறந்த விருந்து நடக்கவில்லை என்பதாகக் கூறியுள்ளனர்.

திருமணச் செலவிற்காக அலீ (ரலி) அவர்கள் தங்களின் இரும்பு கவசத்தை உஸ்மான் (ரலி) அவர்களிடம் 450 திர்ஹம்களுக்கு விற்றுவிட்டனர். ஆனால் உஸ்மான் (ரலி) அவர்களோ அக்கவசத்தை அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்பாக நல்கி விட்டனர்.

## 13. இனிய குடும்பம்

ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களைத் தமக்காக இறைவன் தேர்ந்தெடுத்தது குறித்து பாத்திமா (ரலி) அவர்கள் மிகுந்த மகிழ்ச்சியுற்றார்கள். உலகச் செல்வங்களையும், செல்வச் சீமான்களையும் அவர்கள் துச்சமெனக் கருதினார்கள்.

இப்பொழுது கணவனும் மனைவியும் தனிமையில் இருக்கின்றனர்.

அலீ (ரலி) அவர்கள், அழகே உருவாய் அமைந்த மனைவியிடம் கன்னல் மொழிகளில் பேசிக் கொண்டிருந்தனர்.

அதைக் கேட்டு பாத்திமா (ரலி) அவர்கள் அழத்துவங்கினர். கணவருக்கு ஒன்றுமே புரியவில்லை. நாம் ஏதேனும் தவறாகப் பேசி விட்டோமா? என்று குழப்பம் அவர்களுக்கு ஏற்பட்டு விட்டது. ஆனால் பாத்திமா (ரலி) அவர்களின் அழுகையோ நின்றபாடில்லை.

ஏன் அழுகிறீர்? என்னை மணந்து கொண்டதில் உமக்கு விருப்பமில்லையா? இது அலீ (ரலி) அவர்களின் வினா.

அதற்கு பாத்திமா (ரலி) அவர்கள் கூறியதாவது :

அன்பரே! நான் அதற்காக அழவில்லை. இன்று மன மகிழ்வுடன் நானிருக்கிறேன். ஆனால் என்னுடைய

இறப்பின் பொழுது உயிர் போகும் அளவில் என் நிலை எவ்வாறிருக்குமோ என்று எண்ணினேன். என்னையும் அறியாமல் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடுகிறது.

பாத்திமா (ரலி) அவர்களின் இவ்வார்த்தைகளைக் கேட்டு கணவர் அலீ (ரலி) அவர்கள் திகைப்பில் ஆழ்ந்தார்கள்.

இவ்வுலக வாழ்வின் பற்றற்ற நிலையினை முற்றிலும் உணர்ந்திருந்த அற்புத நங்கை தங்களுக்கு மனைவியாக வாய்க்கப் பெற்றதை கிடைத்தற்கரிய பேறாக எண்ணி அவர்கள் இறும்பூதெய்தினர்.

மனைவியின் சிறப்பை கணவர் உணர்ந்திருந்தது போன்றே பாத்திமா (ரலி) அவர்களும், அலீ (ரலி) அவர்கள் தங்களுக்கு கணவராக வாய்க்கப்பெற்றதை உயர்வாகவே கருதி அடக்கத்துடனிருந்தனர்.

ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள் புகுந்த வீட்டில் தங்களுக்குரிய வேலைகளைக் குறைவறச் செய்தனர்.

மாவரைத்தல், ரொட்டி சுடுதல், வீட்டைத் துப்பரவாக்குதல், பண்ட பாத்திரங்களை கழுவுதல் ஆகிய வேலைகளை பாத்திமா (ரலி) அவர்கள் செய்தார்கள்.

கடைக்குப் போய் வீட்டிற்குத் தேவையான சாமான்களை வாங்கி வருதல், ஒட்டகத்திற்கு தண்ணீர் குடிப்பாட்டுதல் போன்ற வேலைகளை அலீ (ரலி) அவர்களின் தாயார் பாத்திமா பின்த் அஸத் செய்தார்.

இவ்வாறு இல்லத்தில் அவரவர்களுக்கு உரிய வேலைகளைப் பிரித்துத் தந்தனர் நபி (ஸல்) அவர்கள். அவர்களின் திட்டப்படியே அனைத்தும் நடந்து வந்தன.

சிலவேளைகளில் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களே தண்ணீர் கொண்டுவந்தனர். கடைச்சாமான்கள் வாங்கி வந்தனர்.

## 14. தந்தையின் அருகாமை

பாத்திமா (ரலி) அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களின் வீட்டிற்கு தொலைவில் குடியிருந்தனர். இது அண்ணலாருக்கு மிகவும் சங்கடமாக இருந்தது. அடிக்கடி மகளைப் பார்க்க முடியவில்லையே என்று அவர்கள் ஏங்கினர். ஒரு நாளேனும் மகளைப் பார்க்காமல் அவர்களால் இருக்க முடியவில்லை. அவர்கள் மீது நபியவர்கள் கொண்ட பாசம் எத்தகையது என்பதனை எவராலும் விவரிக்க இயலாது.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

என்னுடைய இந்த மகள் உலகிலேயே சிறந்த பெண்மணி என்று.

நபியவர்கள் மட்டுமின்றி, அன்னை கதீஜா (ரலி) அவர்களும் தாங்கள் உயிர் வாழ்ந்த காலத்தில் கடைசிப் பெண் குழந்தையான பாத்திமா (ரலி) அவர்கள் மீது மிக்க அன்புடையவர்களாகவே இருந்துள்ளனர்.

மதீனாவில் வாழ்ந்த பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வெளியூர் செல்ல நேரிட்டால், அருமை மகளார் பாத்திமாவைப் பார்த்து விட்டுத்தான் செல்வார்கள்.

அதே போன்று வெளியூரிலிருந்து மதீனாவிற்கு திரும்ப நேரிட்டல் முதலில் சென்று பாத்திமா (ரலி) அவர்களைப் பார்த்து அன்பொழுக உரையாடி விட்டு, ஏதேனும் செய்திகளிருப்பின் அவற்றை அறிந்து கொண்ட பின்னரே தங்களின் இல்லத்திற்கு வருவார்கள்.

மகளின் மீது அன்பு இந்த அளவிற்கு இருந்தமையால், பாத்திமா (ரலி) தங்களின் வீட்டினருகிலேயே வந்துவிட வேண்டும் என்று அவர்கள் எண்ணினார்கள். அதே போன்று பாத்திமா (ரலி) அவர்களும் தந்தையாரின் இல்லத்தினருகிலேயே குடி வந்து விட மிகவும்

விரும்பினார்கள். தற்பொழுது வீடேதும் காலியாக இல்லையே என்ற நபி (ஸல்) அவர்கள் தயங்கினார்கள்

அப்பொழுது பாத்திமா (ரலி) அவர்கள், மதீனாவைச் சேர்ந்த அன்சாரிகளில் ஒருவரான ஹாரிஸா இப்னு நுஃமான் (ரலி) அவர்களிடம் பல வீடுகள் இருப்பதாகவும் அவற்றுள் ஒன்றைத் தமக்கு ஏற்பாடு செய்து தருமாறும் கேட்டுக் கொண்டார்கள்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள், அவர் தம்மிடம் உள்ள வீடுகள் பலவற்றை மக்காவிலிருந்து ஹிஜ்ரத் செய்து வந்த முஹாஜிரீன்களுக்குக் கொடுத்து விட்டதாகவும், மேலும் மேலும் அவரிடம் வீடு கேட்க நாணமாக உள்ளதெனவும் கூறினார்கள்.

இவ்வாறு வீடு குறித்து நபி (ஸல்) அவர்களும், பாத்திமா (ரலி) அவர்களும் பேசிக்கொண்ட செய்தி எவ்வாறோ ஹாரிஸா இப்னு நுஃமான் (ரலி) அவர்களின் செவிக்கு எட்டி விட்டது.

அவர்கள் ஓடோடி வந்தார்கள். நபி (ஸல்) அவர்களைப் பார்த்து, ''அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! தங்கள் வீட்டிற்கு அருகிலேயே தங்கள் மகளார் பாத்திமா வந்து வசிப்பதற்கு விரும்பியதாக அறிந்தேன். தங்கள் இல்லத்தினருகிலேயே எனக்கொரு வீடு இருக்கிறது. அதில் பாத்திமா வசிக்கட்டும். உடனே அவரை அழைத்துக் கொள்ளுங்கள். இறைவன் மீது ஆணையாக! என்னிடம் உள்ளவை அனைத்தும் தங்களுடையதே! மேலும் என் வீடுகளில் நான் குடியிருக்கும் பொழுது எனக்கு ஏற்படும் இன்பத்தைக் காட்டினும் அவற்றை தங்களுக்கு கொடுத்து விடும் பொழுது தான் அதிக இன்பம் ஏற்படுகிறது'' என்று கூறினார்கள்.

பின்னர் ஹாரிஸா இப்னு நுஃமான் (ரலி) அவர்கள் தங்களின் வீட்டை உடனடியாக காலி செய்து கொடுத்து

விட்டார்கள். அதில் பாத்திமா (ரலி) அவர்களும் இனிதே குடிபுகுந்தார்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஹாரிஸாவின் பெருந்தன்மையை எண்ணி வியந்ததுடன் அவர்களுக்காக துஆச் செய்தார்கள்.

## 15. இமாம் ஹஸன் (ரலி)

ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள், நபி (ஸல்) அவர்களின் பக்கத்து வீட்டிலேயே குடி வந்திருந்தார்கள். இதனால் தங்களின் சிற்றன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடம் அதிகம் பழகும் வாய்ப்பும் அவர்களுக்கு ஏற்பட்டது.

அன்னை ஆயிஷா (ரலி) அவர்களும், பாத்திமா (ரலி) மீது மிகுந்த அன்புடையவராயிருந்தனர். இவர்கள் இருவரும் வசித்த வீடுகளை ஒரே ஒரு சுவர் பிரித்து நின்றது. அச்சுவரின் இருந்த ஜன்னல்களின் வழியாக தாயும், மகளும் அளவளாவி மகிழ்வது வழக்கம்.

இந்த வீட்டிற்கு குடிவந்த பின்னரே ஹஜ்ரத் ஹஸன் (ரலி) அவர்கள் பிறந்தனர். அவர்கள் ஹிஜ்ரீ 3ம் ஆண்டு, ரமலான் பிறை 15-வியாழனன்று பிறந்தனர்.

பேரர் பிறந்ததும் நபி (ஸல்) அவர்கள் மிக்க மகிழ்ச்சியடைந்தனர். பேரப் பிள்ளையின் காதுகளில் பாங்கு சொல்லி, தங்களின் வாயில் வைத்து சுவைத்த பேரீச்சம் பழத்தை அக்குழந்தைக்கு ஊட்டினர்.

ஹஜ்ரத் ஹஸன் (ரலி) அவர்கள் உருவத்தில் பாட்டானாரையே ஒத்திருந்தார்கள்.

அக்குழந்தைக்கு பெற்றோர் குஹாப் என்ற பெயரை முதலில் சூட்டியிருந்தனர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அதனை மாற்றி ஹஸன் (அழகானவர்) என்று பெயரைச் சூட்டினர்.

ஆனால் பின்னர் ஹஸன் (ரலி) அவர்களுக்கு அபூமுஹம்மது என்ற சிறப்புப் பெயரும் ஏற்பட்டது.

ஹஜ்ரத் ஹஸன் (ரலி) அவர்கள் பிறந்த ஏழாம் நாள் அவர்களின் தலை முடி இறக்கப்பட்டு அதன் எடையள விற்கு வெள்ளியை அகீகாவாக ஏழை எளியவர் களுக்கு வழங்கப்பட்டது.

பின்னர் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பேரருக்காக ஓர் ஆட்டை குர்பானி கொடுத்தனர்.

நபியவர்கள் பேரர் மீது மிகுந்த அன்புடையவர் களாயிருந்தனர். குழந்தை ஹஸன் (ரலி) அவர்களை நபி (ஸல்) அவர்கள் தங்களின் தோள் மீது சுமந்து கொண்டு, ''யா அல்லாஹ்! இவர் மீது நான் அன்புடைய வனாயுள்ளேன்! நீயும் இவர் மீது அன்பு செலுத்துவாயாக''! என்று துஆச் செய்வார்கள்.

## 16. இமாம் ஹுஸைன் (ரலி)

இமாம் ஹஸன் (ரலி) அவர்கள் பிறந்த ஆண்டிற்கு அடுத்த ஆண்டான ஹிஜ்ரி 4-ஷஅபான் பிறை 5-இல் பாத்திமா (ரலி) அவர்களின் இரண்டாவது மகனான இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் பிறந்தார்கள்.

இமாம் ஹஸன் (ரலி) அவர்கள் பிறந்த ஐம்பதாவது நாளில் இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் தம் அன்னையின் வயிற்றில் கருவுற்றிருக்கலாம் என்று வாக்கிதி குறிப்பிட்டுள்ளார்.

இமாம் ஹஸன் (ரலி) அவர்கள், உருவத்தில் அண்ணல் நபி (ஸல்) அவர்களை இடுப்பிற்கு மேல் ஒத்திருந்தனர் என்றும் இமாம் ஹுசைன் (ரலி) அவர்கள் தம்முடைய பாட்டனாரை உருவத்தில் இடுப்பிற்குக் கீழ் ஒத்திருந்தனர் என்றும் கூறப்படுகிறது.

''ஹஸனும் ஹுஸைனும் சுவனத்தின் இருமலர்கள்'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

# 17. வறுமையின் பிடியில்

ஹஜ்ரத் அலீ (ரலி), பாத்திமா (ரலி) ஆகியோரின் இல்வாழ்க்கை ஆரம்ப முதல் கொண்டு இறுதிவரை வறுமையின் கொடும்பிடியில் சிக்கி இருந்தது.

எந்த அளவிற்கு எனில், புழங்குவதற்கு பாத்திரங்கள் இல்லை; சமைப்பதற்கு தானிய மணிகளோ இதர பொருள்களோ இல்லை; உடுத்துவதற்கு கந்தலாடைகளைத் தவிர்த்து வேறில்லை படுத்துறங்குவதற்கு சரியான பாய் இல்லை. கடுங்குளிரில் போர்த்திக் கொள்ள போதுமான போர்வை இல்லை. இதுவே சுவனத்தின் பேரரசி பாத்திமா (ரலி) அவர்களின் புவன வாழ்க்கை.

இவ்வாழ்வைக் கண்டு அவர்கள் அஞ்சவுமில்லை : கலங்கவும் இல்லை; கவலையுறவும் இல்லை. அந்த அளவிற்கு நபி (ஸல்) அவர்கள் தங்களின் அருமை மகளாருக்கு அற்புதமான பயிற்சியைத் தந்திருந்தார்கள்.

துவக்கத்தில் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுடனே இருந்து, அவர்களிட்ட பணிகளை சிரமேற்கொண்டு செய்து வந்தமையால் தமக்கென எவ்விதத் தொழிலையும் அவர்கள் ஏற்படுத்திக் கொள்ளவில்லை.

இதனால் மணவாழ்க்கை துவங்கிய பொழுது வறுமை அவர்கள் வாட்டியது. எனினும் அவர்கள் புல் அறுத்துக் கொண்டு வந்து அதனை விற்று அதன் மூலம் கிடைக்கும் வருவாயைக் கொண்டு தாமும் உண்டு, தம்முடைய தாய், மனைவி ஆகியோருக்கும் உணவளித்தனர். ஆனால் ஒரு வேளை கூட வயிறாற அவர்களில் எவரும் உணவு உண்டதில்லை.

பாத்திமா (ரலி) அவர்கள் மணப்பெண்ணாய் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களின் இல்லத்தில் நுழைந்த பொழுது அங்கு ஓர் ஆட்டின் தோலைத் தவிர்த்து வேறெதுவும்

இருக்கவில்லை. படுத்து உறங்குவதற்கு பாய் இன்மையால் அதனையே பாயாகப் பயன்படுத்திக் கொண்டனர் புதுமணத் தம்பதிகள்.

அலீ (ரலி) அவர்களிடம் ஒரு போர்வை இருந்தது. அது எப்படிப்பட்டதெனில், அதனைக் கொண்டு தலையை மூடினால், கால் வெளியில் தெரியும்; காலை மூடினால் தலை தெரியும். கடும் குளிரில் கூட சில வேளைகளில் தலை மூடப் படாமலும் சில பொழுது கால் மூடப்படாமலும் அவர்கள் உறங்கலாயினர்.

ஒரு சில வேளைகளில் போரில் சிறைப் பொருள்கள் அலீ (ரலி) அவர்களுக்குக் கிடைப்பதுண்டு; அப்பொழுது அதன் மூலம் குடும்பம் நடக்கும். அதன் பின்னர் மீண்டும் பழைய நிலை வந்துவிடும்.

## 18. நோயின் மடியில்

ஒரு முறை பாத்திமா (ரலி) அவர்கள் நோயுற்று அவதிப்பட்டார்கள். அதனைக் கேள்வியுற்ற அருமை தந்தை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மகளாரைக் காண ஓடோடி வந்தார்கள். அவர்களுடன் அவர்களின் உத்தமத் தோழர்களும் வந்தனர். அங்கு நடந்ததை நபித்தோழர்கள் கூறுவதை நாமும் கேட்போம்.

நபித்தோழர்களான இம்ரான் இப்னு ஹஸீன் (ரலி) ஜாபிர் இப்னு ஸம்ரா (ரலி) ஆகியோர் கூறுவதாவது :

ஒரு முறை பாத்திமா (ரலி) அவர்கள் நோயுற்றிருந்தார்கள். மகளாரைக் காண நபி (ஸல்) அவர்கள் சென்றார்கள். அவர்களுடன் நாங்களும் சென்றோம். மகளாரின் வீட்டு வாயிலருகே நின்ற வண்ணம் நபி (ஸல்) அவர்கள் உள்ளிருந்த பாத்திமா (ரலி) அவர்களுக்கு ஸலாம் கூறினார்கள். உள்ளே வருவதற்கு அனுமதி கோரினார்கள். மகளாரும் தந்தையாரை உள்ளே வருமாறு அழைத்தார்கள்.

அப்பொழுது நபி (ஸல்) அவர்கள், ''என்னுடன் வந்திருக்கும் இவர்களும் உள்ளே வரலாமா?'' என்று வினவ,

அதற்கு பாத்திமா (ரலி) அவர்கள், அருமைத் தந்தையீர்! தங்களுடன் வந்திருப்போர் யார் யார் ? என்று கேட்டனர்.

உடனே நபி (ஸல்) அவர்கள், தங்களுடன் வந்திருந்த தோழர்களின் பெயர்களைக் கூறினார்கள்.

அது கேட்ட பாத்திமா (ரலி) அவர்கள், எனதருமைத் தந்தையீர்! தற்பொழுது என் வசம் ஒரு சிறிய போர்வை மட்டுமே உள்ளது. என் உடலை (முழுமையாகப்) போர்த்திக் கொள்ள அதனைத் தவிர்த்து வேறொன்றும் இல்லை என்று கூறினர்.

அது கேட்ட அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தங்கள் மீது போர்த்தியிருந்த போர்வையை எடுத்து கதவு இடுக்கின் வழியாகத் தூக்கி எறிந்து, என்னருமை மகளே! இதனைப் போர்த்திக் கொள்ளும் என்றனர்.

பாத்திமா (ரலி) அவர்களும் அவ்வண்ணமே செய்தனர். பின்னர் நபி (ஸல்) அவர்கள் உள்ளே சென்று,

மகளே இப்பொழுது உமது உடல் நிலை எவ்வாறு உள்ளது என்று வினவினர்.

அதற்கு மகளார், ''தந்தையீர்! உடல் வலி நீங்காமல் உள்ளது. மேலும் உண்பதற்கு வீட்டில் எதுவுமே இல்லை'' என்று கூறினர்.

அதுகேட்ட அண்ணல் நபி (ஸல்) அவர்கள், மகளே! உலகிலுள்ள பெண்களனைவருக்கும் தலைவியாக அல்லாஹ் உம்மை ஆக்கியுள்ளான். அதனை எண்ணி நீர் திருப்தியடைய வில்லையா? என்றனர்.

உடனே பாத்திமா (ரலி) அவர்கள் தந்தையீர்! உலகப் பெண்களனைவருக்கும் தலைவி என்னும் பதவி அன்னை மர்யம் (அலை) அவர்களுக்கு உரியது அல்லவா? என்று கேட்க,

அன்னை மர்யம்(அலை) அவர்கள், அவர்களின் காலப் பெண்களுக்கெல்லாம் தலைவியாவார். நீரோ உம்முடைய காலப் பெண்களுக்கெல்லாம் தலைவி ஆவீர் என்று நபி (ஸல்) அவர்கள் விடையளித்தனர்.

அப்பொழுது நபித் தோழர்களான. இம்ரான் இப்னு ஹஸீன் (ரலி), ஜாபிர் இப்னு ஸம்ரா (ரலி) ஆகியோர் தங்களுக்குள், “அல்லாஹ்வின் திருத்தூதரின் மகளாருக்கு இத்தகைய பதவி என்று கூறிக் கொண்டனர்.

அது கேட்ட நபி (ஸல்) அவர்கள், அத்துடனின்றி பாத்திமாவே கியாம நாளில் பெண்களனைவருக்கும் தலைவியாய் இருப்பார் என்று கூறினர்.

## 19. தாங்க இயலாத பசி

வீட்டில் உண்பதற்கு ஏதும் இன்மையால் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் மிகவும் வேதனைப்பட்டார்கள். அவர்களுக்கோ அகோர பசி என்ன செய்வது? என்று வெளியில் புறப்பட்டார்கள்.

அதன் பிறகு நடந்ததை அவர்களே கூறுவதைக் கேட்போம்.

ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் கூறினார்கள்:

ஒரு நாள் குளிர் காலத்தில் நான் வீட்டை விட்டு வெளியில் புறப்பட்டுச் சென்றேன். அப்பொழுது எனக்கோ அகோராப் பசி. உண்பதற்கு ஏதேனும் கிடைக்காதா என்று பார்த்தேன். அப்பொழுது ஒரு யூதன் தன்னுடைய தோட்டத்திற்கு வாளியின் மூலம் நீர் இறைத்துக் கொண்டிருந்தான். சுவரின் ஒரு துளை வழியாக நான் அவனைப் பார்த்த பொழுது அவன் அரபியே! உனக்கு என்ன வேண்டும்? என்று வினவினான்.

பின்னர், ஒரு வாளிக்கு ஒரு பேரீச்சம் பழம் என கணக்கிட்டு தண்ணீர் இறைத்துத் தருவீரா? என்றும் கேட்டான்.

நான் உடனே. ''சரி சரி! கதவைத் திற! நான் உள்ளே வருகிறேன்'' என்றேன்.

அவன் கதவைத் திறந்து விட நான் உள்ளே நுழைந்தேன். அப்போழுது என்னிடம் ஒரு வாளியை அவன் தந்தான். நான் அதனை வாங்கி ஒரு வாளி தண்ணீர் இறைத்தேன். உடனே அவன் ஒரு பேரீச்சம் பழம் தந்தான். இவ்விதமாக நான் தண்ணீர் இறைக்க இறைக்க அவனும் பேரீச்சம் பழங்களைக் கொடுத்துக் கொண்டே இருந்தான். நானும் கைப்பிடி அளவு பேரீச்சம் பழம் கிடைக்கும் வரை நீரை இறைத்து விட்டு பின்னர் வாளியை அவனிடம் கொடுத்து விட்டேன். பேரீச்சம் பழங்களைத் தின்று, தண்ணீர் குடித்து விட்டு பள்ளிக்குச் சென்றேன் .

இவ்வாறு தாம் பட்ட பசியின் வேதனையைப் பற்றி ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் கூறினார்கள்.

மற்றொரு நாள் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் வெளியிலிருந்து பசியுடன் வீட்டினுள் நுழைந்தார்கள். அப்பொழுது மனைவி பாத்திமா (ரலி) அவர்களின் இன்முகம் கணவரை அன்புடன் வரவேற்றது.

உண்பதற்கு ஏதேனும் உண்டா? இது கணவரின் கேள்வி.

ஒரேயொரு கோதுமை மணி கூட இல்லாத நிலை நம் இல்லத்தில் கடந்த மூன்று நாட்களாக இருந்து கொண்டிருக்கிறது என்று பொறுமையின் சின்னமாம் பாத்திமா (ரலி) அவர்கள் பதிலளித்தார்கள்.

உடனே அலீ (ரலி) அவர்கள், இதனை என்னிடம் நீர் ஏன் இது வரை கூறவில்லை? என்று வினவ,

தங்களை ஏதேனும் கேட்டுத் தொந்தரவு தரலாகாது எனவும், அவ்வாறு கேட்டு தங்களை நாணமுறச் செய்யலாகாது எனவும் எனது அருமைத் தந்தையார் எனக்கு உபதேசித்துள்ளார்கள். அதனாலேயே இது பற்றி நான்

தங்களிடம் கூறாதிருந்தேன்'' என்று பாத்திமா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

அருமை மனைவியின் இங்கிதமான பதில் கணவரின் பசியினை எங்கோ விரட்டியடித்தது.

## 20. நோயும், நேர்ச்சையும், நோன்பும்

ஒரு சமயம், பாத்திமா (ரலி) அவர்களின் இரு கண்மணிகளாம் ஹஸன் (ரலி) ஹுஸைன் (ரலி) ஆகியோருக்கு கடுமையான நோய் ஏற்பட்டது.

பிள்ளைகள் நலம் பெற்று விடின் அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தும் முகமாக மூன்று நாட்களுக்கு தொடர்ந்தாற் போல நோன்பு நோற்பதாக கணவர் அலீ (ரலி) மனைவி பாத்திமா (ரலி) ஆகிய இருவருமே நேர்ச்சை செய்து கொண்டனர்.

இறையருளால் பிள்ளைகளின் நோய் நீங்கி உடல் நலம் பெற்றனர். அதனால் நேர்ச்சையின் படி கணவரும் - மனைவியும் நோன்பு நோற்கலாயினர்.

ஆனால் ஸஹர் செய்யவும் உணவு இல்லை; நோன்பு திறக்கவும் அவர்களிடம் உணவு இல்லை. இந்நிலையில் நோன்பும் துவங்கியது.

முதல் நாள் காலையில் அலீ (ரலி) அவர்கள் ஒரு யூதனிடம் சென்றார்கள்.

நீ பஞ்சு கொடுத்தால், அதனை கூலிக்கு நூலாக நூற்றுக் கொண்டு வந்து தருவேன் என்று அவனிடம் கூறினார்கள்.

அது கேட்ட அவன் அவர்களுக்கு ஒரு பஞ்சு மூட்டையை கொடுத்து, அதனை நூலாக நூற்றுக் கொண்டு வந்தால் கூலியாக மூன்று மரக்கால் சோளம் தருவதாகக் கூறினான்.

அதற்கொப்ப ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களும் பஞ்சு மூட்டையைத் தூக்கிக் கொண்டு வீட்டிற்கு வந்தனர்.

பாத்திமா (ரலி) அவர்கள் பஞ்சிலிருந்து நூல் நூற்றார்கள். யூதன் முன்னர் கூறியவாறே அதற்கு சோளம் கொடுத்தான். அவர்கள் அதனை மாவாக அரைத்தார்கள். பின்னர் அம்மாவிலிருந்து தமக்கொன்றும், தம்முடைய கணவருக்காகவும், பிள்ளைகள் ஹஸன்(ரலி) ஹுஸைன் (ரலி) ஆகியோருக்கும், அடிமைப் பெண்ணுக்கும் ஆக ஐந்து ரொட்டிகள் சுட்டனர்.

மாலை வந்தது.

ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் மக்ரிபு தொழுகையை பள்ளியில் நபி (ஸல்) அவர்களுடன் தொழுத பின்னர் வீட்டிற்கு வந்தனர். நோன்பு திறந்தபின் சாப்பிட ரொட்டிகள் தயாராயிருந்தன. உண்ணப் போகும் நேரம்,

''முஹம்மது (ஸல்) அவர்களின் குடும்பத்தினரே! நான் ஓர் ஏழை, எனக்கு உண்பதற்கு ஏதேனும் தாருங்கள். அல்லாஹ் சுவனத்தில் உங்களுக்கு மேலான உணவைத் தருவான்'', என்று யாரோ கூறுவது கேட்டு அனைவரும் திரும்பிப் பார்த்தனர்.

வீட்டு வாயிலில் ஒரு பிச்சைக்காரர் நின்றிருந்தார். அனைவரும் உண்ணுவதை நிறுத்தி விட்டனர். ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் தங்களின் அருமை மனைவி பாத்திமா (ரலி) அவர்களிடம் என்ன செய்யலாம் என்று வினவிய பொழுது ரொட்டிகள் அனைத்தையும் ஒரு சேர அந்த வறியவரிடம் கொடுத்து விடலாம் என்று அவர்கள் கூறினர். அவ்வாறே அலீ (ரலி) அவர்கள் ஐந்து ரொட்டிகளையும் அந்த பிச்சைக்காரரிடம் கொடுத்து விட்டனர். இதனால் அனைவரும் பட்டினி கிடக்கலாயினர்.

மறுநாள் இரண்டாம் நோன்பு நோற்றனர். பஞ்சை நூலாக நூற்று, சோளம் பெற்று, மாவாக்கி ரொட்டி சுட்டனர். முன்போன்றே அலீ (ரலி) அவர்கள் தொழுது விட்டு வந்து உணவுண்ண அமர்ந்தனர்.

அப்பொழுது வீட்டு வாயிலில், அனாதையொருவர்

நின்று, தம்முடைய அவல நிலையினை எடுத்துரைத்து உண்ண உணவு தருமாறு வேண்டி நின்றார். அப்பொழுதும் அவர்கள் அன்று சுட்டரொட்டிகளை அந்த அனாதையிடம் கொடுத்து விட்டு தண்ணீர் குடித்து நோன்பு திறந்தனர்.

பின்னர் மூன்றாம் நாள் நோன்பு நோற்றனர். காலையில் பாத்திமா (ரலி) அவர்கள் யூதன் கொடுத்த பஞ்சின் மூன்றாம் பாகத்தை நூலாக நூற்று, சோளம் பெற்று, அதனை மாவாக அரைத்து ரொட்டி சுட்டு, அன்று மாலை நோன்பு திறக்க அமர்ந்தனர்.

வழக்கம் போன்று அன்றைய நாளும் சோதனை அவர்களுக்காக காத்திருந்தது. ரொட்டிகளை உண்ணப்போகும் வேளையில் கைதியொருவன் தம்முடைய வறிய நிலையினைக் கூறி உண்ண உணவு கேட்டு நின்றிருந்தான்.

அலீ (ரலி) அவர்களும், தயங்கவில்லை, மூன்றாம் நாளான அன்றும் ரொட்டிகளைத் தானம் செய்து விட்டு தண்ணீர் அருந்தி பட்டினி கிடந்தனர்.

நேர்ச்சை செய்ததற்காக மூன்று நாட்கள் செவ்வனே நோன்புகளை நோற்று இறைவனுக்கு ஆற்ற வேண்டிய கடமையினை இருவரும் குறைவற ஆற்றினார்கள்.

நான்காம் நாள் வந்தது. யாரும் நோன்பில்லை; எனினும் உண்பதற்கு உணவில்லை.

அலீ (ரலி) அவர்கள் தங்களின் இரு செல்வங்களாம் ஹஸன் (ரலி), ஹுஸைன் (ரலி) ஆகியோரை அழைத்துக் கொண்டு அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். அவர்களால் நடக்கவும் இயலவில்லை. அவர்களின் நிலைகண்டு நபி (ஸல்) அவர்கள் மிகவும் வேதனைப் பட்டார்கள்.

''உங்களைப் பார்க்க எனக்கு மிகவும் கவலையாக உள்ளது. வாருங்கள் பாத்திமா (ரலி) அவர்களிடம்'' என்று கூறிய நபியவர்கள், மகளாரின் இல்லத்திற்கு வந்தார்கள்.

அப்பொழுது பாத்திமா (ரலி) அவர்கள் தொழுது கொண்டிருந்தார்கள். பசி பட்டினியின் காரணத்தால் அவர்களின் கண்கள் குழி விழுந்தனவாகக் காணப்பட்டன. கண்கள் கலங்கிய நிலையில் தம் மகளாரை ஆரத் தழுவிய தந்தையார், மகளின் நல்வாழ்வுக்காக அல்லாஹ்விடம் துஆச் செய்தார்கள்.

அப்பொழுது வானவர் கோமான் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் இறை வசனத்தை ஏந்தியவர்களாக அண்ணலாரிடம் வந்தார்கள். அப்பொழுதுதான்,

வயுத்இமூனத் தஆம அலா ஹுப்பிஹி மிஸ்கீனன் வ யத்தீமன் வ அஸீரா

-(அன்றி, அல்லாஹ்வின்மீதுள்ள அன்பின் காரணமாக ஏழைகளுக்கும், அனாதைகளுக்கும், சிறைப் பட்டோருக்கும் ஆகாரமளித்தும் வந்தனர்.) -(76:8)

என்ற திருவசனம் இறங்கியது. இது ஹஜ்ரத் அலீ (ரலி), ஹஜ்ரத் பாத்திமா (ரலி) ஆகியோரை சிறப்பிப்பதற்காக அல்லாஹ் இறக்கிய திருவசனமாகும் என்று ஹஜ்ரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

இதனை துர்ருல் மன்தூர் எனும் கிரந்தத்தில் அல்லாமா ஸுயூத்தி (ரஹ்) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

## 21. பாதையில் கிடந்த பொற்காசு

ஒரு முறை அலீ (ரலி) அவர்கள் வெளியிலிருந்து வீட்டிற்கு வந்தனர். அப்பொழுது சின்னஞ்சிறு பிஞ்சுகளாம் ஹஸன் ஹுஸைன் ஆகிய இருவரும் அழுது கொண்டிருந்தனர். இவர்கள் ஏன் அழுகிறார்கள்? இது தகப்பனாரின் கேள்வி.

பசி தாங்க இயலாமல் அவர்கள் அழுகிறார்கள். வீட்டிலோ உண்பதற்கு ஏதுமில்லை என்று தாயார் பதிலளித்தார்கள்.

குழந்தைகள் பசிவேதனை தாங்க இயலாமல் துடித்தனர். இதனால் அவர்களின் அழுகை நின்ற பாடில்லை.

இதனைக் காண சகிக்காமல் அலீ (ரலி) அவர்கள் வீட்டை விட்டு வெளியே புறப்பட்டார்கள். அப்பொழுது நடந்து செல்லும் பாதையில் ஒரு பொற்காசு பளபளத்துக் கொண்டிருந்தது. வேறு வழியின்றி கீழே கிடந்த அப்பொற்காசை ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் எடுத்துக் கொண்டு வீட்டிற்கு வந்தார்கள்.

காசு கிடைத்த விபரத்தை தங்களின் மனைவியிடம் கூறினார்கள். அது கேட்ட பாத்திமா (ரலி) அவர்கள் யூதனின் கடைக்குச் சென்று மாவு வாங்கி வருமாறு கூறினார்கள்.

அவ்விதமே ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் யூதனின் கடைக்குச் சென்று பொற்காசைக் கொடுத்து மாவு வாங்கினார்கள். நபி (ஸல்) அவர்கள் மீது மிகுந்த அன்புடைய அந்த யூதன், அலீ (ரலி) அவர்கள் நபியவர்களின் மருமகர் என்றறிந்ததும் மாவுக்காக காசு பெற்றுக் கொள்ள மறுத்து விட்டான். ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் எவ்வளவோ வற்புறுத்தியும் மாவுக்காசு யூதன் காசு வாங்கிக் கொள்ளவே இல்லை.

வேறு வழியின்றி அவர்கள் மாவை வாங்கிக் கொண்டு வீட்டிற்கு வந்தனர். பின்னர் பாத்திமா (ரலி) அவர்கள் அக்காசிற்கு இறைச்சி வாங்கி வருமாறு கணவரிடம் கூறினர்.

அவர்களும் அப்பொற்காசிற்கு இறைச்சி வாங்கி வந்தார்கள். சமையல் முடிந்தது. எனினும் தனியே தாங்கள் மட்டும் அமர்ந்து உண்ண பாத்திமா (ரலி) அவர்களின் உள்ளம் இடம் தரவில்லை. எனவே தந்தையாரையும் அழைத்து அனைவருமாக அமர்ந்து உணவு உண்ண விரும்பினார்கள்.

நபி (ஸல்) அவர்களும் வந்தனர். அப்பொழுது பாத்திமா (ரலி) அவர்கள், அருமைத் தந்தையாரிடம் பொற்காசு கிடைத்த விபரத்தையும், உணவு வாங்கப்பட்டது பற்றியும் எடுத்துக் கூறி, அவ்வுணவு ஆகுமானதா இல்லையா என்று விசாரித்தார்கள்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருப்பெயர் கூறி உண்ணுங்கள் என்பதாகக் கூறினார்கள். அனைவரும் அவ்வண்ணமே கூறி உணவு உண்டார்கள்.

அப்பொழுது வீட்டு வாசலில் ஒரு சிறுவன் வந்தான். அவன் என் பொற்காசு ஒன்று காணாமற் போய்விட்டது. அதனை யாரேனும் எடுத்திருந்தால் அல்லாஹ்விற்காகவும் இஸ்லாத்திற்காகவும் என்னிடம் கொடுத்து விடுங்கள் என்று கூறினான்.

அது கேட்ட அலீ (ரலி) அவர்கள் திடுக்கிட்டனர். யாது செய்வதென அறியாது விழித்தனர்.

அப்பொழுது, நபி (ஸல்) அவர்கள், அச்சிறுவனைத் தங்களின் அருகில் அழைத்து அது விழுந்த இடத்தைப் பற்றி விசாரித்தார்கள். பின்னர் தங்களின் மருமகர் அலீ (ரலி) அவர்களை நோக்கி, நான் கூறியதாகக் கூறி இறைச்சி விற்கும் சுசாப்புக் கடைக்காரனிடம் அந்தப் பொற்காசை வாங்கி வாரும். இறைச்சி வாங்கிய கடனை நான் திருப்பித் தந்து விடுகின்றேன் என்று கூறி அனுப்பினார்கள்.

அவ்வண்ணமே அலீ (ரலி) அவர்கள் செய்தனர். அச்சிறுவனிடம் அப்பொற்காசு ஒப்படைக்கப்பட்டது.

இவ்வாறு ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களும், பாத்திமா (ரலி) அவர்களும் அல்லாஹ்வால் சோதிக்கப்பட்டார்கள்.

அல்லாஹ்வின் சோதனை அவர்களின் வாழ்வில் சங்கிலித் தொடர் போன்று தொடர்ந்து கொண்டே இருந்தது.

## 22. பாத்திமா (ரலி)வும், பரிசுத்த அன்னையரும்

பாத்திமா (ரலி) அவர்கள் தம்முடைய தந்தையார் மீது அன்பு செலுத்தியது போன்று தம் சிற்றன்னையரிடமும் மிகுந்த அன்பும் பாசமும் உடையவர்களாய்த் திகழ்ந்தனர். அன்னையர் எவரிடத்திலும் அவர்கள் மனக்கசப்பு உடையவர்களாய் இருந்ததில்லை. அதே போன்று நபி (ஸல்) அவர்களின் பரிசுத்த மனைவிமார்களும் மகளார் பாத்திமா (ரலி) அவர்கள் மீது அன்பு செலுத்தினர். அனைவரிலும் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அன்போ அளவு கடந்ததாயிருந்தது.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தங்களின் மனைவி யருள் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் மீது தனி அன்புடையவர்களாயிருந்தனர். இது அனைவருக்கும் தெரியும்.

ஆயிஷா (ரலி) அவர்கள் வீட்டில் நபியவர்கள் தங்கினால் நபித்தோழர்கள் உணவுப் பொருள்களை அன்பளிப்பாக அனுப்பி வைப்பர். இது மற்ற மனைவியருக்கு வெறுப்பையூட்டியது. ஆயிஷா (ரலி) அவர்கள் மீது நபியவர்கள் மிகுந்த அன்பாய் இருப்பது மற்ற மனைவியருக்கு பொறாமையைத் தந்தது.

இதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டும் என்று தீர்மானித்த அவர்கள் இது பற்றிப் பேச அண்ணலாரின் அருமை மகளார் பாத்திமா (ரலி) அவர்களைத் தேர்ந்தெடுத்தனர். அவர்களும் சம்மதித்தனர்.

பின்னர் ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள், மற்ற மனைவியரின் கூற்றையும், குறைபாடுகளையும் தங்களின் அருமைத் தந்தையாரிடம் எடுத்துக் கூறினர்.

அது கேட்ட நபி (ஸல்) அவர்கள், நீங்கள் விரும்பாத தேனை நான் விரும்புகிறேன் என்று பதிலளித்தனர்.

அண்ணலாரின் இந்த பதில் பாத்திமா (ரலி) அவர்களை மௌனத்தில் ஆழ்த்தியது. ஆனால் அவர்களின் சிற்றன்னையரோ அவர்களை மீண்டும் போய் அண்ணலாரிடம் பேசும்படி தூண்டினர். ஆனால் பாத்திமா (ரலி) அவர்களோ மறுத்து விட்டனர்.

அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள், பாத்திமா (ரலி) அவர்களைப் பற்றி வெகுவாக சிறப்பித்துக் கூறியுள்ளனர்.

பாத்திமா (ரலி)ப் பற்றி அவர்கள் குறிப்பிடுகையில்,

''பாத்திமா (ரலி)வைப் போல் சிறந்த பெண்ணை நான் காணவில்லை. அவர் ஏறக்குறைய தந்தையாரைப் போன்றே பழக்க வழக்கங்களிலும், தோற்றத்திலும் காணப்பட்டனர். அண்ணலாரைக் காண அவர்கள் வந்தால், நபியவர்கள் எழுந்து நின்று மகளாரின் கரத்தை முத்தமிட்டு, தாங்கள் அமர்ந்திருந்த இடத்தில் மகளாரை அமரச் செய்வார்கள்'' என்று கூறியுள்ளனர். பாத்திமா (ரலி) அவர்களின் சிறப்புகளை எவ்வாறு விவரிப்பது?

## 23. ஒரு பிடி பேரீச்சம் பழத்திற்காக...

உலகில் வேறெந்த உத்தமப் பெண்ணும் அனுபவித்திராத வறுமையின் வேதனையை பாத்திமா (ரலி) அவர்கள் அனுபவித்தார்கள்.

இக்கால முஸ்லிம் பெண்கள் தங்களை பாத்திமா (ரலி) அவர்களின் வழி முறையில் வந்தவர்கள் என்று சொல்லவே அருகதை அற்றவர்கள் என்று கூறலாம், தவறில்லை. அது மட்டுமல்ல, அவர்களை முன்மாதிரியாக ஏற்றுக் கொள்ளவும் இவர்கள் தயாராக இல்லை என்பதும் தெளிவு.

இவர்கள் தாங்களும் முஸ்லிம்களே என்று வீராப்புடன் கூறிக் கொள்வதை நினைக்கும் பொழுது சிரிப்பும், வேதனையும்தான் மிஞ்சுகின்றன.

பீபீ பாத்திமா, (ரலி), அன்னை ஆயிஷா (ரலி), அன்னை கதீஜா (ரலி) ஆகிய இம்மாதரசிகளைக்

காட்டினும் இஸ்லாமியப் பெண்ணிலக்கணத்திற்கு முன்மாதிரியாகத் திகழ்பவர் இவ்வுலகில் வேறு யார்? இவர்களைப் பின்பற்ற நம் பெண்கள் தயாரா?

இவர்கள் எந்த அளவிற்குக் கைசேதப்படப் போகிறார்கள் என்பது கியாம நாளில்தான் தெளிவாகும்.

நம் பெண்களிற் சிலர் தான்தோன்றித்தனமாக மாறுவதற்கு அவர்களின் கணவன்மார்களும் உடந்தை என்று எண்ணும்பொழுது எத்தனை வேதனை ஏற்படுகிறது.

பாத்திமா (ரலி) அவர்கள் கடுமையான உழைப்பாளியாக இருந்தார்கள். வீட்டில் மாமியார் இருந்த போதிலும், அவரைத் தொந்தரவு செய்யாமல் அவர்களே குடும்ப வேலைகள் அனைத்தையும் செய்தனர்.

பஞ்சைக் கொண்டு நூல் நூற்பது; சோளம், கோதுமை போன்ற தானியங்களைத் திரிகையில் இட்டு கை சிவந்து போகும் அளவிற்கு அரைப்பது; சிறு குழந்தைகளான ஹஸன், ஹுஸைன் ஆகிய இருவரையும் செவ்வனே கவனித்துக் கொள்வது; தண்ணீர் சுமந்து கொண்டு வருவது; துணிகளைத் துவைப்பது; பாத்திரங்களைக் கழுவுவது ஆகிய எல்லா வேலைகளையும் முகம் சுளிக்காமல் செய்து வந்தார்கள்.

கணவர் அலீ (ரலி) அவர்கள் வீட்டினுள் நுழையும் பொழுது, அவர்களை அருமை மனைவி பாத்திமா (ரலி) அவர்கள் முகமலர்ச்சியுடன் வரவேற்ற பண்பாடு! ஆகா! அது அவர்களுக்கே உரிய கலையோ என்று எண்ணவும் தோன்றும்.

இத்தனைக்கும் கணவர் அலீ (ரலி) அவர்கள் வறுமையில் வாடியவராகவும், வெறுங்கையுடன் வீட்டினுள் நுழையக் கூடியவராகவுமே இருந்தனர்.

ஆனால் இன்று, கணவன் லட்சம் லட்சமாக சம்பாதிக்கும் திறனாளியாகவும், கேட்பதையெல்லாம் வாங்கித்தரும் கையாளாகவும் இருந்தும் கூட, அவன்

வீட்டினுள் நுழையும் பொழுது மனைவியின் முகத்தைப் பார்க்க வேண்டுமே! அந்த அளவிற்குக் கோணல் மாணலாக இருக்கும். மறுமையைப் பற்றிய சிந்தனை இல்லாததே இதற்குக் காரணம்!

ஒரு முறை ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் ஏதேனு மோரிடத்திலாவது கூலி வேலை கிடைக்காதா என ஏங்கியவர்களாக வெளியிற் புறப்பட்டார்கள்.

மதீனாவில் கூலி வேலை கிடைப்பதே அரிதாக இருந்தது; அவ்வாறு கிடைத்தாலும், கிடைக்கும் கூலியோ மிக சொற்பமானதாக இருந்தது.

அலீ (ரலி) அவர்கள் ஒரு தோட்டத்தினருகில் சென்றார்கள். அது ஒரு கிழவிக்குச் சொந்தமானது எனத் தெரிய வந்தது. அவளிடம் சென்று அவர்கள் வேலை கேட்டார்கள்.

அவளும் தோட்டத்தில் நீர் இறைத்துப் பாய்ச்சும் வேலையைத் தந்தாள். அவள் சொன்ன அளவிற்கு அவர்கள் கடினமாக உழைத்து வேலையை முடித்தார்கள். கைகளில் கொப்புளங்கள் கூட வந்து விட்டன. அந்த அளவிற்கு உழைத்தார்கள்.

இறுதியில் அக்கிழவி கொடுத்த கூலி என்ன தெரியுமா? ஒரேயொரு பிடி பேரீச்சம் பழம் மட்டுமே. அதனைக் கொண்டு வந்து பாத்திமா (ரலி) அவர்களிடம் கொடுத்தார்கள். பின்பொரு முறை இதே போன்று கூலி வேலை செய்த பொழுது அவர்களுக்கு கோதுமை கிடைத்தது.

இவ்வாறு அவர்களது குடும்ப வாழ்க்கை நடை போட்டுக் கொண்டிருந்தது. ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் வேலை செய்ய சளைத்தவர் அல்லர். இறைவனின் நாட்டம் வறுமை அவர்களை வாட்டியது அவ்வளவுதான். அது மட்டுமன்றி முதலாளிகளும், செல்வந்தர்களும் அந்நாளில் தொழிலாளர்களிடம் கடினமான வேலை வாங்கிக் கொண்டு

மிக மிக சொற்பமான கூலியைக் கொடுத்ததும் அவர்களின் ஏழ்மைக்கு மற்றொரு காரணம் எனலாம்.

## 24. வெளுத்த முகம்

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் பெண்மக்களுள் ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள் செக்க செவேர் என்று சிவந்தவர்களாகவும், அழகு முகத்தையுடையவர்களாகவும் இருந்தார்கள்.

அவர்களின் திருமணத்திற்குப் பின்னர், குடும்ப வாழ்க்கைத் தொடங்கியதிலிருந்து, பசியும் பட்டினியுமே அவர்களின் வாடிக்கையாக இருந்தது. பசியைத் தாங்கிக் கொண்டு புன்முறுவல் பூப்பதில் அவர்களுக்கு நிகர் இல்லை எனலாம்.

ஒரு முறை அவர்கள் தங்களின் அருமைத் தந்தை யாரைக்காண வந்தார்கள். அப்பொழுது ஸஹாபி ஒருவர் நபியவர்களுடன் இருந்தார்கள்.

மகளாரைக் கண்டதும் நபியவர்கள், தங்களின் பக்கத்தில் வருமாறு அழைத்தார்கள். அவர்களும் தந்தை யாரின் பக்கத்தில் சென்றார்கள்.

அப்பொழுது நபி (ஸல்) அவர்கள், பாத்திமா (ரலி) அவர்களின் முகத்தைப் பார்த்தார்கள். அம்முகம் பசியால் வாடி வதங்கி, செந்நிறம் மாறி இரத்த ஓட்டம் இல்லாத அளவிற்கு வெளுத்துப் போயிருந்தது.

உடனே நபி (ஸல்) அவர்கள், மகளாரின் முகத்தில் தங்களின் கரத்தை வைத்து துஆச் செய்தார்கள்.

பசி வேதனையை நீக்குபவனே! தேவைகளை நிறை வேற்றி, குறைகளனைத்தையும் போக்குபவனே! முஹம் மதின் மகள் பாத்திமாவின் பசியைப் போக்குவாயாக!

இந்த துஆ கேட்டு முடிந்தவுடன் பாத்திமா (ரலி) முகம் செந்நிறமாக மாறி, இரத்த ஓட்டம் நிறைந்ததாகக் காணப்பட்டது. அன்று முதல் அவர்கள் பசியால் அவதியுறவில்லை.

# 25. ஏழ்மையில் இன்பம் கண்ட ஏந்திழை

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தங்களின் பரிசுத்த வாழ்வில் எதனையெல்லாம் கடைப்பிடித்தார்களோ அதனையெல்லாம் பாத்திமா (ரலி) அவர்களும் கடைப் பிடித்தார்கள். தந்தை எதனை விரும்பினார்களோ அதனை மகளும் விரும்பினார்கள். எதனை அவர்கள் வெறுத்தார்களோ அதனை இவர்களும் வெறுத்தார்கள்.

அந்த அளவிற்கு நபி (ஸல்) அவர்களுக்கும், அவர்களின் அருமை மகளார் பாத்திமா (ரலி) அவர்க ளுக்கும் இடையே ஒற்றுமை காணப்பட்டது. தோற்றத்திலும் தந்தையாரை ஒத்திருந்த அவர்கள் நடையிலும், பாவனை யிலும் எளிமையான உடை உடுத்துவதிலும் நபி (ஸல்) அவர்களை முற்றிலும் ஒத்திருந்தனர்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஏழ்மையையும், எளிமையையும் விரும்பினார்கள்.

''என்னை ஏழையாக வாழச் செய்து, ஏழையாகவே மரணிக்கச் செய்வாயாக!'' என்று அல்லாஹ்விடம் துஆச் செய்து வந்தார்கள் நாயகம் (ஸல்).

அதே போன்று பாத்திமா (ரலி) அவர்களும், ஏழ்மையையும், வறுமையையுமே தங்களின் அணிகலன் களாக ஆக்கிக் கொண்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் வளவாழ்வையும், ஆடம்பரத்தை யும் வெறுத்தார்கள். செல்வத்தையும், சுகபோகத்தையும் வெறுத்தார்கள்.

ஒருநாள் ஜைனப் பின்த் அதபா (ரலி) என்ற பெண் பாத்திமா (ரலி) அவர்கள் வீட்டிற்கு வந்தார். இறைத் தூதரின் மகள் பனியின் குளிரில் நடுங்குவதைக் கண்டு போர்வை யொன்றை அன்பளிப்பாக நல்கினார். ஆனால் பீபீ பாத்திமா (ரலி) அவர்கள் அதனை ஏற்க மறுத்து

விட்டனர். என் கணவர் கொடுத்த இப்போர்வையே எனக்குப் போதுமானது என்று கூறிவிட்டனர்.

மற்றொரு நாள் பணக்காரப் பெண்ணொருத்தி பாத்திமா (ரலி) அவர்களின் வறிய நிலையை எண்ணிக் கலங்கி, ''தங்களுக்கு நான் பணம் தரட்டுமா?'' என்று கேட்க, ''எனக்குத் தேவையில்லை. அதனை ஏழை எளியவர்களுக்குக் கொடுத்து விடுங்கள்'' என்று கூறினர்.

மொத்தத்தில் பாத்திமா (ரலி) அவர்கள் ஒருதுறவி போல வாழ்ந்தார்கள். அவர்களின் ஆடைகள் கிழிந்தும், ஒட்டுப் போடப்பட்டும் இருந்தன.

## *26. மகளாரை மறக்காத மாநபி*

ஒரு நாள் நபித்தோழர்களுள் ஒருவரான அபூ அய்யூப் அன்சாரி (ரலி) அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களை விருந்துண்ண அழைத்தார்கள். நபியவர்களும் மறுக்காமல் அவ்வழைப்பை இனிதுடன் ஏற்றுக் கொண்டனர்.

விருந்து தயாராயிற்று, அதில் பொறித்த இறைச்சியும், ரொட்டியும் பறிமாறப்பட்டது. அதனைக் கண்டதும் நபி (ஸல்) அவர்களுக்கு, பசியும், பட்டினியுமாய் வாடி வதங்கிக் கொண்டிருக்கும் தங்களின் ஈரல் குலை பாத்திமா (ரலி) அவர்களின் நினைவு வந்து விட்டது. அருமை மகளாரும், பிஞ்சு உள்ளங்களாம் பேரர்கள் ஹஸன், ஹுஸைன் ஆகியோரும் பசித்திருக்க தாங்கள் மட்டும் விருந்துண்பதா என்ற எண்ணம் ஏற்பட்டது.

எனவே, அவர்கள் சிறிது பொறித்த இறைச்சியை ஒரு தட்டில் இட்டு, அதனை ஒருவரிடம் கொடுத்து இதனைக் கொண்டுபோய் என்னருமை மகள் பாத்திமாவிடம் கொடுத்து விட்டு வாரும், அவரும் என்னைப் போன்றே கடந்த சில நாட்களாக பசித்திருக்கிறார் என்று கூறினார்கள்.

மகளார் தம்முடைய தந்தையைத் தாம் உண்ணும் பொழுதெல்லாம் நினைத்துக் கொண்டது போன்று, தந்தையாரும் மகளாரின் நினைவின்றி ஒரு வேளை உணவையும் உண்டதில்லை.

நபி (ஸல்) அவர்கள் பாத்திமா (ரலி) அவர்களின் வறிய நிலையை எண்ணி வேதனைப்படுவார்கள். அதனால் அலீ (ரலி) அவர்கள் தம்மிடம் வரும் பொழுதெல்லாம் உதவி செய்வார்கள்.

ஒருமுறை அலீ (ரலி) அவர்களுக்கு நபியவர்கள் இரண்டு அடிமைகளைக் கொடுத்தனர். அவ்விருவரும் ஒருதாய் பிள்ளைகள். அலீ (ரலி) அவர்கள் ஒரு நாள் ஓர் அடிமையை விற்று விட்டார்கள். அதனைக் கேள்வியுற்ற நபி (ஸல்) அவர்கள் மனம் வருந்தினார்கள். ஒரு தாய் பிள்ளைகளைப் பிரிப்பது நல்லதல்ல என்பதால் அவ்வடிமையை மீண்டும் வாங்கி இருவரையும் ஒரே இடத்தில் இருக்கச் செய்யுமாறு அலீ (ரலி) அவர்களைக் கேட்டுக் கொண்டார்கள்.

## 27. அண்ணலாரின் கண்டிப்பு

பாத்திமா (ரலி) அவர்கள் எப்பொழுதும், எந்நிலையிலும் ஷைத்தானின் வலையில் விழுந்து விடக்கூடாது என்பதற்காக நபி (ஸல்) அவர்கள் தம் மகளாரிடம் கண்டிப்புடன் நடந்து கொண்டார்கள்.

ஆடம்பர வாழ்வின் வாடை கூட தம் அருமை மகளார் மீது வீசி விடக்கூடாது என்பதில் அவர்கள் மிகவும் எச்சிரிக்கையுடன் இருந்து வந்தார்கள்.

ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள், பாத்திமா (ரலி) அவர்களின் வீட்டிற்குச் சென்றார்கள். அப்பொழுது மகளாரின் கழுத்தை ஒரு தங்கச் சங்கிலி அணி செய்து கொண்டிருந்தது. அதனை நபி (ஸல்) அவர்கள் பார்த்தார்கள்.

உடனே பாத்திமா (ரலி) அவர்கள், "அது தம்முடைய கணவர் வழங்கியது" என்ற செய்தியைக் கூறினார்கள்.

உடனே நபியவர்கள், "பாத்திமாவே! முஹம்மதுவின் மகளின் கழுத்தில் நெருப்புச் சங்கிலி இருக்கிறது என்று மக்கள் கூறுவதை நீர் விரும்புகின்றீரா?" என்று கேட்டனர்.

உடனே அருமை மகளார் பாத்திமா (ரலி) அவர்கள் அதனை விற்று விட்டார்கள். மேலும் அப்பணத்தைக் கொண்டு ஓர் அடிமையை வாங்கி உரிமை விட்டார்கள்.

இந் நற்செய்தியைச் செவியுற்ற நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ் பாத்திமாவை நரக நெருப்பிலிருந்து காப்பாற்றி விட்டான் என்று கூறி அல்லாஹ்வுக்கு அளப்பெரும் நன்றியினைக் காணிக்கையாக்கினார்கள்.

மேற்கண்ட நிகழ்ச்சி போன்று நபிகளார் தம் மகளார் மீது பலமுறை கண்டிப்புடன் நடந்துள்ளார்கள்.

இன்னொரு நிகழ்ச்சியினை இங்கு காண்போம்.

ஒரு முறை நபி (ஸல்) அவர்கள், மகளாரின் அழைப்பின் பேரில் உணவுண்ண வந்தனர். அப்பொழுது மகளாரின் வீட்டு வாயிலையும், ஜன்னல்களையும் அழகிய திரைச் சீலைகள் அலங்கரித்துக் கொண்டிருந்தன. அது கண்ட நபி (ஸல்) அவர்கள் உடனடியாக அங்கிருந்து திரும்பி விட்டார்கள்.

உடனே ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் விரைந்து ஓடி வந்து, "எதற்காகத் திரும்பிச் செல்கிறீர்கள்" என்று வினவ,

"அலங்காரம் செய்யப்பட்ட வீட்டினுள் நுழைவது அல்லாஹ்வின் தூதருக்குச் சிறப்பைத் தராது" என்று கூறினர்.

அதுகேட்ட மகளார் பாத்திமா (ரலி) அத்திரைச் சீலைகளைத் தங்களின் இல்லத்திலிருந்து கிழித்தெறிந்து விட்டு மறுவேலை பார்த்தார்கள்.

# 28. வீட்டு வேலையின் கடுமை

நபிமார்களுக்குசெல்லாம் முத்திரையான அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறுதி நபி என்ற சிறப்பிற்குரியவர்கள்.

அத்தகைய இறைத்தூதர் (ஸல்) அவர்களின் மகளார் பீபீ பாத்திமா (ரலி) அவர்கள், மிகச் சாதாரணமான பெண்கள் கூட படக்கூடாத கஷ்டங்களனைத்தையும் இவ்வுலகில் அனுபவித்தே தீர வேண்டும் என்று விரும்பினார்கள். உலகில் உள்ள ஏழைகளில் தாங்களும், தங்களின் குடும்பத்தவர்களும் அங்கம் வகிக்க வேண்டும் என்பது அவர்களின் திட்டமாகும்.

அவர்களின் திட்டத்திற்கும் விருப்பத்திற்கும் அவர்களின் குடும்பத்தினர் மிகவும் கட்டுப்பட்டிருந்தனர். எனினும் அனைவரைக் காட்டிலும் அண்ணல் நபி (ஸல்) அவர்களை மிகவும் பின்பற்றியவர்கள் பீபீ பாத்திமா (ரலி) அவர்களேயாவர்.

அவர்களின் குடும்ப வேலைகள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போயிற்று.

சிறு பிள்ளைகளான ஹஸன் ஹுஸைன் ஆகியோரை கவனித்துக் கொண்டே, வீட்டு வேலைகள் செய்ய முடியாமல் அவர்கள் மிகவும் வேதனைப் படுவார்கள். மாவரைத்ததால் கைகள் கொப்பளித்திருந்தமையால், அவர்களால் மற்ற வேலைகள் எதனையும் செய்ய இயலவில்லை.

இக்காலத்தில் தானியங்கள் எந்திரங்கள் வாயிலாக அரைக்கப்பட்டு வீட்டிற்கு வருவதால் நம் பெண்களுக்கு, ரொட்டி சுடவோ, இதர உணவுப் பொருள்கள் சமைக்கவோ மிகவும் எளிதாக உள்ளது.

ஆனால், பாத்திமா (ரலி) அவர்கள் நிலை என்ன தெரியுமா? அவர்கள் வீட்டிலிருந்த திரிகை மூலமாக

கையால் மாவரைத்து அதன் பின்னர் ரொட்டி சுட்டனர். ஆக, அவர்களின் நிலை பரிதாபத்திலும் பரிதாபம் ஆகும்.

ஒரு முறை ஹஜ்ரத் பிலால் (ரலி) அவர்கள் பாத்திமா (ரலி) அவர்களின் வீட்டுக்கு சென்ற போது பாத்திமா (ரலி) மாவரைத்துக் கொண்டிருந்தனர். பிள்ளைகள் ஹஸன் (ரலி), ஹுஸைன் (ரலி) ஆகியோர் அழுது கொண்டிருந்தனர். பிலால் (ரலி) அவர்கள், பாத்திமா (ரலி) அவர்களைப் பார்த்து, ''அம்மையீர்! தாங்கள் விரும்பினால், இந்தப் பிள்ளைகளை நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்றனர்.

அது கேட்ட அவர்கள். ''குழந்தைகள் உங்களிடம் இருப்பதற்கு மிகவும் ஆசைப்படுவார்கள்'' என்றனர்.

அதனால் ஹஜ்ரத் பிலால் (ரலி) அவர்கள், பீபீ பாத்திமா (ரலி) அவர்கள் மாவரைத்து முடியும் வரை குழந்தைகளை அழாமல் கவனித்துக் கொண்டனர்.

இதனால் அவர்கள் பள்ளிக்கு வந்து தொழுகையில் கலந்து கொள்ளத் தாமதம் ஆகிவிட்டது.

நபி (ஸல்) அவர்கள், தாமதத்திற்கான காரணத்தை பிலால் (ரலி) அவர்களிடம் வினவியபொழுது, அவர்கள் பாத்திமா (ரலி) வீட்டிற்கு தாம் சென்ற விவரத்தைக் கூறினர்.

## 29. உதவிக்கு ஆள் தேவை

ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள் வீட்டில், தனித்தே கடுமையாக உழைத்ததன் காரணமாக அவர்களின் உடல் மிகவும் சோர்வுற்றது. தங்களுக்கு வீட்டு வேலைகளைச் செய்வதில் உதவியாக யாரேனும் இருந்தால் நன்றாக இருக்கும் என்று அவர்கள் எண்ணினார்கள்.

ஒரு நாள் அருமைக் கணவர் அலீ (ரலி) அவர்கள், தங்களின் அருமை மனைவி பாத்திமா (ரலி) அவர்களைப் பார்த்து,

''பாத்திமா! தங்களின் தந்தையாரிடம் சிறை பிடிக்கப் பட்ட கைதிகள் வந்துள்ளனர். நீர் அவர்களிடம் சென்று ஒரு கைதியைத் தருமாறு கேட்டு வாரும்'' என்று கூறினர்.

அது கேட்ட பாத்திமா (ரலி) அவர்கள், தந்தை யாரைக்காண அவர்களின் இல்லத்திற்குச் சென்றனர். அங்கு நபி (ஸல்) அவர்கள் இருக்கவில்லை. அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் மட்டுமே இருந்தனர். தாங்கள் வந்த நோக்கத்தை அவர்களிடம் தெரிவித்து விட்டு பீபீ பாத்திமா (ரலி) அவர்கள் திரும்பி விட்டார்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வீட்டிற்கு வந்த பொழுது, ஆயிஷா (ரலி) அவர்கள், மகளார் பாத்திமா (ரலி) அவர்கள் வந்து சென்ற செய்தியினைத் தெரிவித்தார்கள்.

அது கேட்ட நபி (ஸல்) அவர்கள் உடனே மகளாரைக் காணச் சென்றார்கள்.

அப்பொழுது இரவு நேரமாகையால், மகளார் வீட்டில் அனைவரும் படுக்கைக்குச் செல்லத் தயாராயிருந்தனர்.

அண்ணலாரைக் கண்டதும் மகளாரும், மருமகரும் எழுந்தனர்.

அது கண்ட நபியவர்கள், ''எழுந்திருக்க வேண்டாம்; படுங்கள்'' என்று கூறி அவர்கள் இருவரின் நடுவிலும் அமர்ந்து,

''உங்களுக்குத் தேவையான அடிமையைக் காட்டினும் மேலான செய்தியை நான் அறிவிக்கட்டுமா?'' என்று கூறி, நபி (ஸல்) இரவில் தஸ்பீஹாத் ஓதும் முறைகளைக் கற்றுத்தந்தார்கள். அதாவது தூங்கச் செல்லும் முன் சுப்ஹானல்லாஹ் 33 தடவை, அல்ஹம்துலில்லாஹ் 33 தடவை, அல்லாஹு அக்பர் 34 தடவை ஓதிக் கொள்ள வேண்டும்.

## 30. பேரர்களும் பெருமானாரும்

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தங்களின் மகளார் மீது அன்பு செலுத்தியது போன்றே, பேரர்களாம் ஹஸன் (ரலி), ஹுஸைன் (ரலி) அவர்கள் மீதும் பேரன்பு கொண்டிருந்தனர்.

மகளாரைக் காணப்போகும் பொழுதெல்லாம் நபி (ஸல்) அவர்கள் பேரர்களிடம் கொஞ்சி மகிழ்வார்கள். பேரர்களும் பாட்டனாரைக் கண்டவுடன் மகிழ்ச்சியால் துள்ளிக் குதிப்பார்கள்.

மூன்று வயதான பொழுதிலேயே பேரர்கள், பாட்டனாருடன் பள்ளிக்குச் செல்லும் பழக்கத்தை மேற்கொள்ளத் துவங்கினர்.

ஒரு நாள் வழக்கம் போல பேரர்கள், பாட்டனாருடன் பள்ளி வாசலுக்குச் சென்றனர். நபி (ஸல்) அவர்கள் சிறிது நேரம் சொற்பொழிவாற்றினர். பின்னர் தொழத் துவங்கினர்.

தொழுகையில் சஜ்தாவில் அவர்கள் இருக்கும் பொழுது, பேரர்களுள் மூத்தவரான ஹஸன் (ரலி) அவர்கள், பாட்டனாரின் முதுகின் மீது ஏறி அமர்ந்து கொண்டார்.

விளையாட்டுப் பிள்ளைகளின் குறும்புத்தனத்தைப் புரிந்து கொண்ட நபி (ஸல்) அவர்கள் பேரர் முதுகிலிருந்து கீழே இறங்கும் வரை சஜ்தாவிலிருந்து தங்களின் தலையை மேலெழுப்பவே இல்லை.

சில வேளைகளில் தங்கள் தோள்களின் மீதே பேரர்களை நபியவர்கள் சுமந்து செல்வர்.

அவ்வாறு அவர்கள் ஹஸன் (ரலி) அவர்களை ஒரு நாள் தங்களின் தோளில் சுமந்து சென்றதைக் கண்ட ஸஹாபி யொருவர், நல்ல வாகனம்தான் என்றார்.

அது கேட்ட நபியவர்கள், வாகனத்தின் மீதிருப்பவரும் நல்லவரே! என்றனர்.

# 31. கணவர்-மனைவி பிணக்கு

இவ்வுலகில் கணவன்-மனைவி என்றால் சிறு சண்டை சச்சரவு என்பதெல்லாம் சாதாரணம். அண்ணலாரின் மகள் பீபீ பாத்திமா (ரலி) அவர்களும் இதற்கு விதிவிலக்கில்லை போலும்.

ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள், தங்கள் மனைவியின் உயர்வையும், சிறப்பையும் உணர்ந்து அன்பும், பாசமும் உடையவர்களாக நடந்து கொண்டனர்.

அதே போல் பாத்திமா (ரலி) அவர்களும், தங்கள் கணவர் இறைவனால் தமக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்பதை மனதிற் கொண்டு, மிக்க மரியாதையுடனும், அடக்க ஒடுக்கத்துடனும் இருந்து வந்தனர்.

இதனையும் மீறி சில வேளைகளில் அவர்களுக் கிடையில் பிணக்கு ஏற்படுவதுண்டு. இவ்வாறு பிணக்கு நேரிடும் பொழுதெல்லாம் நபி (ஸல்) அவர்கள் இருவரையும் அமைதிப்படுத்தி வைப்பார்கள்.

ஒரு முறை நபியவர்கள், மகளாரின் இல்லத்தினுள் நுழைந்த பொழுது கணவர்-மனைவிக்கிடையில் சச்சரவு என்றறிந்து, இருவரையும் அமைதிப்படுத்தினர்.

பின்னர் அவர்கள் வெளியே வந்த பொழுது ஸஹாபி ஒருவர், ''உள்ளே போகும் பொழுது ஒரு மாதிரியாக இருந்தீர்கள். இப்பொழுது மகிழ்ச்சியுடன் வருகிறீர்கள்? என்று வினவ,

அனைவரிலும் எனக்கு மிகவும் விருப்பமுள்ள இருவரை நான் சமாதானம் செய்து விட்டேன்'' என்றனர்.

மற்றொரு நாள், கணவர்-மனைவிக்குள் பிணக்கு ஏற்பட்டது. அதனால் சினமுற்ற அலீ (ரலி) அவர்கள் வீட்டை விட்டு வெளியேறினார்கள். நேரே பள்ளிவாயிலுக்குச் சென்று சுவரில் சாய்ந்தபடி படுத்தார்கள்.

கணவர்-மனைவி சச்சரவு பற்றிய செய்தி நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியது. உடனே அவர்கள் மருகரைத் தேடிப் புறப்பட்டார்கள். அவர்கள் பள்ளிவாயிலுக்கு வந்த பொழுது அங்கே அலீ (ரலி) அவர்கள் சுவரில் சாய்ந்தபடி படுத்திருப்பதைக் கண்டு அவர்களின் மனம் வேதனைப் பட்டது.

அலீ (ரலி) அவர்களின் முதுகில் மண் ஒட்டிக் கொண்டிருந்தது. உடனே அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தங்களின் பொற்கரங்களால் அம்மண்ணை அன்பொழுகத் தட்டி விட்டனர்.

பின்னர் ''அபூதுராப் (மண்ணின் தந்தையே) எழுந்து அமரும்'' என்று கூறினார்கள். பின்னர் மருகரை சமாதானம் செய்து வைத்தார்கள்.

மகளுக்கும்-மருமகருக்கும் பிணக்கு நேரிடும் பொழுதெல்லாம், நபி (ஸல்) அவர்கள், தங்களின் மகளையே கண்டித்தார்கள். மகளுக்கே அதிகமதிகம் உபதேசித்தார்கள். மகளார் பக்கமே நியாயம் இருப்பது போல் தோன்றினாலும், மருமகரை குறை கூறமாட்டார்கள். மாநபி (ஸல்) அவர்களின் உன்னதப் பண்புகளில் இதுவும் ஒன்றாகும்.

பொதுவாக, உலக வழக்கு என்ன தெரியுமா?

தம்முடைய மகள் மீதே தவறிருந்த பொழுதும், எந்த தந்தையும் மகளைக் கண்டிக்கமாட்டார். மருமகர் மீதே குறை கூறித் திரிவார். மருமகர் எவ்வளவு மதிப்பிற்குய வராக இருப்பினும், தம்முடைய மகளையே அவர் உயர்வாக எண்ணிக் கொள்வார்.

பெண்ணைப் பெற்ற தாய்மார்களோ! அல்லாஹு அக்பர்! அவர்களுக்கு கண்மூடித்தனமாக பேசுவதே பெரும் பாலான வழக்கமாகும். அவர்கள் எப்பொழுதும மகள்மீதுள்ள குறைகளை மறைத்து மருமகர் மீதே குறை

கூறித்திரிவார்கள். இது இன்றளவும் உலகில் வழக்கமாக நடந்து வரும் செயல்களாகும்.

இவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களை மாமனார் என்ற கோணத்தில் வைத்துப் பார்ப்பது அவசியமாகும். மாமனார் என்ற நிலையில் அவர்கள் மருமகரிடம் காட்டிய கண்ணியமும், மரியாதையும் அற்புதம்.

பாத்திமா (ரலி) அவர்களின் இல்லத்தில் நிலவிய வறுமை போல் நம்மவர்கள், தங்கள் மகள் வீட்டில் கண்டால், அவ்வளவுதான், ''கையாலாகாதவன்; வேலையில்லாமல் சுற்றுகிறான்; மகளைப் போட்டு கொடுமைப் படுத்துகிறான்; சோம்பேறி; இப்படிப் பட்டவனிடம் மகள் வாழுவதும் ஒன்றுதான்; வாழா வெட்டியாக தாய் வீட்டிலேயே வந்து தங்கி விடுவதும் ஒன்றுதான். இவனெல்லாம் ஓர் ஆண்பிள்ளையா? சே!'' என்று ஏகவசனத்தில் தங்களின் மருமகனை ஏசிப் பேசுவார்கள். ஊரில் ஒருவரையும் விடாது இச்செய்தியைப் பரப்பி, தாங்களை உத்தமர் போன்றும், மருமகனை வீணன் போன்றும் கதை கட்டித் திரிவார்கள்.

இத்தகைய தீய கொள்கையுடைய மாமனார். மாமியார்கள் மிகவும் எச்சிரிக்கையாய் இருப்பது நல்லது. அல்லாஹ் சகலவற்றையும் உற்று நோக்கியவனாய் இருந்து கொண்டுள்ளான்.

மேலும் இவர்கள் தங்களின் வீணான போக்கைத் தவிர்த்து, வள்ளல் நபி (ஸல்) அவர்களின் வழி முறையினைப் பின்பற்றினால் இறையருளால் வெற்றி பெறுவது நிச்சயம்.

மற்றொரு நிகழ்ச்சியினைப் பாருங்கள்:

ஒரு நாள் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள், பாத்திமா நாயகியின் மனம் புண்பட பேசிவிட்டார்கள். உடனே அவர்கள் தங்களின் தந்தையாரிடம் அதனைக் கூற

வந்தார்கள். அலீ (ரலி) அவர்களும், மனைவியின் பின்னாலேயே வந்தார்கள்.

பாத்திமா (ரலி) அவர்கள், கணவரைப் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் முறையீடு செய்தார்கள். அப்பொழுது அலீ (ரலி) அவர்கள் மனைவியின் பின்னால் நின்று கொண்டார்கள். அதைக் கண்ட நபி (ஸல்) அவர்களின் மனம் மிகவும் சங்கடப்பட்டது.

அப்பொழுதும் அவர்கள், தங்களின் மகளாருக்கே உபதேசித்தார்கள்.

''என்னருமை மகளே! கணவருக்கு அடிபணிவது மனைவி மீது கடமையாகும். எப்பொழுதும் எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் நீ உன்னுடைய கணவருக்கு கீழ்ப்படிந்து நடப்பது அவசியமாகும். அவர் உன்னை நோவினை செய்தாலும் கூட அதனை நீ பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும். நன்றாக சிந்தித்துப் பார்! உலகில் எந்த கணவராவது மனைவியைத் தொடர்ந்து வந்து இவ்வாறு பின்னால் நிற்பாரா?''

எந்த நிலையிலும் தம்மைக் கண்டிக்காது, தங்களின் மகளாருக்கே உபதேசம் கூறும் அண்ணலாரின் பாங்கு ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களின் மனதில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்திவிட்டது.

அவர்கள், தம் மனைவி பாத்திமா (ரலி) அவர்களைப் பார்த்துப் பின்வருமாறு கூறினார்கள்.

பாத்திமா! இறைவன் மீது ஆணையாக! இனி எப்பொழுதும், உன் மனம் நோகும்படி நான் நடந்து கொள்ள மாட்டேன் .

அவர்கள் கூறிய வண்ணம், அதன் பின்னர் எப்பொழுதும் முன்போல் நடந்து கொள்ளவில்லை.

## 32. உண்மையா? பொய்யா?

பீபீ பாத்திமா (ரலி) அவர்களின் செவிக்கு ஒரு செய்தி எட்டியது. அது உண்மையா? பொய்யா? என்று தீர்மானிப்பதில் அவர்களுக்கு மிகவும் குழப்பமாக இருந்தது.

பெண்களெல்லாம் பேசிக் கொண்டார்கள். அதாவது, ''பாத்திமாவின் கணவர் அலீ, அபூஜஹ்லின் மகளை மணந்து கொள்ளப்போகிறார்'' என்று.

இதைச் செவியுற்ற பாத்திமா (ரலி) அவர்களுக்கு எவ்வாறிருக்கும்?

அவர்கள் துடித்தார்கள்; துவண்டார்கள். இச்செய்தி உண்மையாயிருந்துவிடின் என்ன செய்வது? என ஆறாத்துயருற்றார்கள்.

உள்ளத்தில் புயல் உருவாகி விட்டது; இனி மனம் அமைதி பெறுமா?

வீட்டிலிருந்து தாமாகவே அவர்களின் பாதங்கள் பெற்ற தந்தையைப் பார்க்கப் புறப்பட்டுச் சென்றன. தளர்ந்த உள்ளங்கொண்ட மகளார் தந்தையாரிடம் விவரத்தைக் கூறி வேதனைப்பட்டார்கள்.

பாத்திமாவின் உள்ளக் குமுறலைக் கண்டு நபி (ஸல்) அவர்களின் மனம் கலங்கியது. அவர்கள் உடனே மகளாரை அழைத்துக் கொண்டு, அலீ (ரலி) அவர்களிடம் சென்றனர்.

மருமகரைப் பார்த்து கூறிய முதல் வார்த்தை.

அலீ! எவர் பாத்திமாவை வேதனைப் படுத்தினாரோ அவர் என்னை வேதனை செய்தவராவார். எவர் பாத்திமாவைஅச்சுறுத்தினாரோ, அவர் என்னை அச்சுறுதியவராவார் என்பதாகும்.

திடுதிப்பென்று, நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியது ஹஜரத் அலீ (ரலி) அவர்களை ஒரு கலக்கு கலக்கிவிட்டது.

அவர்கள், நபியவர்களைப் பார்த்து, அல்லாஹ்வின் தூதரின் கோபத்திற்கு காரணம் என்னவோ? என்று வினவினர்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், அபூஜஹ்லின் மகளை மணந்து கொள்ள உமக்கு எத்துணை துணிச்சல்! அவளை நீர் மணந்து கொள்ள விரும்பினால் அவ்வாறே செய்யும்! ஆனால் பாத்திமாவுக்கு மண விடுதலை அளித்து விடும். எதற்காக என்றால், அல்லாஹ் வின் தூதரின் மகளும், அல்லாஹ்வின் பகைவனின் மகளும் ஒரே வீட்டில் இருக்க முடியாது என்பதால் என்றனர்.

அது கேட்டு இடியேறுண்ட நாகம் போலாயினர் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள். அபூ ஜஹ்லின் மகளை மணந்து கொள்ளும் எண்ணம் தமக்கு அறவே இல்லை என்று அவர்கள் உறுதியாக மொழிந்தனர். அப்பொழுதுதான் நபியவர்களுக்கும், அவர்களின் அருமை மகளார் பாத்திமா (ரலி) அவர்களுக்கும் மன அமைதி ஏற்பட்டது.

## 33. அற்புதப் பண்புகள்

நிச்சயமாக ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்களின் பண்புகளின் சிறப்பினைப் பற்றி எவராலும் முழுமையாக விளக்கிக் கூறிவிட முடியாது. பட்டும் படாததுமாகத்தான் கூற இயலும். வேண்டுமாயின் இவ்வாறு சொல்லலாம்.

அதாவது அண்ணல் நபி (ஸல்) அவர்கள், தங்களின் மகளாரைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது, பாத்திமா என் இதயத்தின் துண்டு என்று கூறினார்கள்.

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகையில், எவர் பாத்திமாவை மகிழ்விக்கிறாரோ அவர் என்னை மகிழ்விப்பவர் ஆவார். எவர் என்னை மகிழ்விக்கிறாரோ அவர் இறைவனை மகிழ்விப்பவர் ஆவார் என்றார்கள்.

ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள் அனைவர் மீதும் அன்பு செலுத்தினர். சிற்றன்னையர் மீதும் அவர்கள் குறைவற்ற பாசமுடையவர்களாயிருந்தனர்.

கணவர் மீது அவர்கள் பேரன்பு கொண்டிருந்தார்கள் என்பதற்கு அலீ (ரலி) அவர்கள் அபூஜஹ்லின் மகளை மணக்க எண்ணியதைச் செவியுற்றதும் அவர்களின் உள்ளம் பட்ட பாடே சாட்சியாகும்.

பாத்திமா (ரலி) அவர்களுக்கு ஆறு குழந்தைகள் பிறந்ததாக வரலாறு கூறுகிறது.

1. ஹஸன் (ரலி), 2. ஹுஸைன் (ரலி), 3. முஹ்ஸின் (ரலி) ஆகிய மூன்று ஆண் குழந்தைகள், இவர்களுள் முஹ்ஸின் (ரலி) குழந்தை பருவத்திலேயே இறந்து விட்டார்.

அவர்களுக்கு மூன்று பெண் மக்கள் பிறந்தனர். அவர்கள் 1. ஜைனப், 2. உம்மு குல்தூம், 3. ருகையா என்போராவர்.

ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள் தங்கள் பிள்ளைகள் மீது மிகுந்த அன்புடையவர்களாக இருந்தார்கள். அவர்களைச் சிறந்த பிள்ளைகளாக உருவாக்குவதற்காக அவர்கள் மிகவும் பாடுபட்டார்கள். ஓய்வு நேரங்களில் பழைய, கிழிந்த துணிகளைத் தைத்த வண்ணம், தம்முடைய பிள்ளைகளுக்கு அழகிய போதனைகளைச் செய்வார்கள்.

நபியவர்களின் வாழ்க்கை அரிய நிகழ்ச்சிகள், திருமறை வேதம் இறங்கிய விதம், மக்கத்துக் காபிர்களின் அடாத செயல், நபியவர்களுக்கு ஏற்பட்ட இன்னல்கள், மதீனாவிற்கு வந்ததற்கான காரணம் ஆகிய அனைத்தையும் பிள்ளைகளுக்குக் கூறுவார்கள்.

அன்புள்ளம் கொண்டவர்களாக பாத்திமா (ரலி) தம்மிடம் பணிபுரிந்த வேலைக்காரியிடம் மிகவும் அன்பாக நடந்து கொண்டார்கள். வேலைக்காரி செய்யும் குற்றங்களை மன்னித்து விடுவது அவர்களின் அன்றாட வழக்கமாகும்.

எவரையும் அவர்கள் கடுமையான வார்த்தைகளால் சாடியதில்லை. கடும் சொற்களைத் தம் வாழ்நாளில் அவர்கள் பயன்படுத்தியதும் இல்லை.

ஈகைப்பண்பு அவர்களிடம் இயற்கையிலேயே குடி கொண்டிருந்தது. பிறரின் துன்பம் நீங்குவதைக் கண்டு அவர்கள் மனம் மகிழ்ந்தார்கள்.

அண்டை வீட்டாருக்கு உதவி புரிவது அவர்களுக்கு மிகவும் பிடித்தமான செயலாகும்.

எப்பொழுதும் ஒலுவுடனே இருந்த அவர்கள், தொழுகையில் மிகவும் கண்டிப்பும், பேணுதலும் உடையவர்களாயிருந்தனர்.

பெண்களுக்கு ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள், போதனை புரிபவர்களாயிருந்தனர்.

ஒரு நாள் ஒரு பெண், அவர்களிடம் வந்து, உங்கள் இல்லத்தில் பழைய பாயைத் தவிர வேறொன்றும் இல்லையே! என்று கூற,

அதற்கு பாத்திமா (ரலி), சிறிது நேரம் இளைப்பாறக் கூடிய இவ்வீட்டைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. ஏனெனில், எனக்கு அழியா மறுமை வீடு கண்ணெதிரில் காட்சி தருகிறது. என்னுடைய பொருள்களனைத்தும் அங்கு சென்று விட்டன. நானும் அங்கு விரைவில் செல்வேன் என்று அறிவுரை கூறினர்.

அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் சகோதரி, அஸ்மா (ரலி) அவர்கள் பீபீ பாத்திமா (ரலி) அவர்கள் மீது மிகவும் அன்புடையவர்களாயிருந்தனர்.

அவர்கள் ஒரு நாள் பாத்திமா (ரலி) அவர்களைக் காணச் சென்றனர். அப்பொழுது அவர்கள் முழங்காலில் அடித்து ஒடிக்க வேண்டிய அளவிற்கு கெட்டியான சோள ரொட்டியையும், பாலையும் உணவாக வைத்திருந்தனர். அது கண்ட அஸ்மா (ரலி) அவர்கள், மற்ற மதப் பெண்கள்

வளவாழ்வுடன் வாழும் பொழுது, தாங்கள் இவ்வாறு இருக்கிறீர்களே? என்றனர்.

அது கேட்ட பாத்திமா (ரலி), நமக்கு மறுமை என்றும், அவர்களுக்கு இம்மை எனவும் விதித்திருப்பது உங்களுக்கு திருப்தி தரவில்லையா? என்றனர்.

## *34. வள்ளல் பாத்திமா (ரலி)*

பாத்திமா (ரலி) அவர்கள் உண்மையில் தாங்களே ஏழையாயிருந்தனர். அந்நிலையிலும் அவர்கள் ஏழை களையும், அனாதைகளையும் கண்டு மனம் இரங்கினர். வந்தவர்க்கெல்லாம் வாரி வழங்கினர். இரந்தோர்க்கெல்லாம் இல்லை யெனாது ஈந்து மகிழ்ந்தனர். அவர்களின் வள்ளல் தன்மையை எவ்வாறு விவரிப்பது?

அவர்களின் திருமண நாளில் தந்தையார் அவர்களுக்கு அழகிய திருமண உடையை வாங்கித் தந்தனர். திருமணம் நடந்த சிறிது நேரத்திற்கெல்லாம் அவ்வுடையை அவர்கள் கழற்றி ஓர் ஏழைக்கு தானமாக வழங்கி விட்டனர்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள், திருமண ஆடை எங்கே? என்று கேட்ட பொழுது, மகளார் விவரத்தைக் கூறினர்.

''வேறு ஆடையை வழங்கியிருக்கக் கூடாதா?'' என்று நபியவர்கள் கூறிய பொழுது,

''உங்களுக்கு விருப்பமானவற்றையே பிறருக்கு வழங்குமாறு தாங்கள் தாமே கூறினீர்கள். அதனால்தான் எனக்கு விருப்பமான அவ்வாடையை வழங்கிவிட்டேன்'' என்றனர். அதுகேட்டு அண்ணல் நபி (ஸல்) மிக்க மகிழ்ச்சியடைந்தார்கள்.

இதோ மற்றொரு நிகழ்ச்சி:

ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் பள்ளியிலிருந்து வெளியே வரும் பொழுது, ஓர் ஏழை ஏதேனும் உதவி கோரி

நின்றார். அவ்வேழையைக் கண்டு இரங்கிய நபியவர்கள், அவருக்குத் தருவதற்குத் தங்களிடம் எதுவும் இல்லா திருப்பது கண்டு மனம் கலங்கினர்.

பின்னர் அவரைத் தம்முடைய மகளார் பாத்திமா (ரலி) அவர்களிடம் அழைத்துச் சென்று ஏதேனும் உதவி பெற்றுத் தருமாறு பிலால் (ரலி) அவர்களிடம் கூறினர்.

பிலால் (ரலி) அவர்களும் அவ்வேழையை அழைத்துக் கொண்டு, பாத்திமா (ரலி) அவர்களிடம் விவரம் கூறினர். ஆனால் அவர்களின் வீட்டிலோ உண்பதற்கு எதுவும் இல்லை. அங்கு மூன்று நாட்களாக பட்டினியே நிலவிக் கொண்டிருந்தது.

பாத்திமா (ரலி) அவர்கள் தற்சமயம் போர்த்திக் கொள்ளப் பயன்படும் போர்வைதான் உள்ளதெனக் கூறி அதனை அவ்வேழைக்குத் தானமாக வழங்கினர்.

அதனைப் பெற்றுக் கொண்ட அவ்வேழை, "குளிருக்கு இதனைப் போர்த்துக் கொள்ளலாம். பசி எடுக்கிறதே அதற்கு நான் என்ன செய்ய?" என்று கேட்க,

உடனே பாத்திமா (ரலி) அவர்கள் உள்ளே சென்று காலங்காலமாக நினைவுச் சின்னம் போல் காத்து வந்து தம்முடைய அன்னை கதீஜா (ரலி) அவர்களின் கழுத்தாபரணத்தை அந்த ஏழையிடம் கொடுத்து, "இதனை விற்று உணவு வாங்கி உண்டு பசி தீரும்" என்று கூறினர்.

பாருங்கள் சகோதரர்களே! பாத்திமா (ரலி) அவர்கள் வெளியிலிருந்து வீடு திரும்பிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஓர் ஏழைச் சிறுவன் குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தான். அவனை அன்போடழைத்து வந்த அவர்கள் தம்முடைய குழந்தைகளுக்காகத் தைத்த புத்தாடை யொன்றை அளித்து, அவனின் ஆடையின்மை யைப் போக்கி மகிழ்ந்தனர்.

இதோ இன்னொரு நிகழ்ச்சி :

ஒரு நாள் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் வீட்டிற்குத்

தேவையான உணவுப் பொருள்களை வாங்கிக் கொண்டு வந்தனர். அப்பொழுது, வழியில் ஓர் ஏழை, தாமும் தம் மனைவியும் பசியால் வாடுவதாகக் கூறினார்.

வீட்டிற்கு வந்த அலீ (ரலி) அவர்கள் இச்செய்தியை தம் அருமை மனைவியாரிடம் கூறினார்கள்.

அதுகேட்ட அவர்கள், உடனே சென்று இவ்வுணவுப் பொருள்களனைத்தையும் அந்த ஏழையிடம் கொடுத்து விட்டுவாரும். அதனால் நாம் பட்டினி கிடந்தாலும் பரவாயில்லை என்று கூறினர். ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களும் அவ்விதமே செய்தனர்.

## *35. பர்தாவைப் பற்றி....*

கோஷா-பர்தா ஆகியவற்றில் ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள் அல்லாஹ்வை மிகவும் அஞ்சிக் கொண்டார்கள். அந்நிய ஆண்களின் கண்களை விட்டும் அவர்கள் மறைந்தே இருந்தார்கள். மேலும் மிகவும் அரிதாகவே அவர்கள் வெளியில் சென்றார்கள்.

''ஒரு பெண் இறைவனின் அருகில் எப்பொழுது இருக்கிறாள்?'' என்ற வினா எழுப்பப்பட்ட பொழுது, பாத்திமா (ரலி) அவர்கள், ''அவள் பர்தாவினுள் இருக்கும் பொழுது!'' என்று அழகிய, ஆழமான விடையை அளித்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் தங்களின் தோழர்களைப் பார்த்து, 'ஒரு பெண்ணுக்கு உயர்ந்த பொருள் எது?' என்று கேட்ட பொழுது, பலர் பல்வேறு பதில்களைக் கூறினர்.

வீட்டிற்கு வந்த அலீ (ரலி) இதற்கான விடையை பீபீ பாத்திமா (ரலி) அவர்களிடம் கேட்ட பொழுது,

''ஒரு பெண் தன் உடலை அந்நிய ஆண்களுக்குக் காட்டுதல் கூடாது. அந்நிய ஆண்களும் அவளைப் பார்க்கக் கூடாது'' என்று விடையளித்தனர்.

இவ்விடையை அலீ (ரலி) அவர்கள், நபி (ஸல்) அவர்களிடம் சென்று அறிவித்த பொழுது, நபியவர்கள், ''பாத்திமா என் இதயத்தின் பாகமாக உள்ளார். எனவே, அவர் கூறியதே என்னுடைய கருத்தும் ஆகும்'' என்றார்கள்.

எனவே பர்தா பற்றி ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள் தெளிவான விளக்கம் உடையவர்களாயிருந்தார்கள். மேலும் கண்டிப்பாகவும் இருந்தார்கள்.

## 36. தந்தையாருடன் ஹஜ்

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இறுதி ஹஜ் ஹிஜ்ரீ 10-ஆம் ஆண்டில் நிகழ்ந்தது. இந்த ஹஜ்ஜின் பொழுது நபிகளாருடன் லட்சத்திற்கும் மேற்பட்ட முஸ்லிம்கள் கலந்து கொண்டு கடமைகளை நிறைவேற்றினர்.

இந்த ஹஜ்ஜின் பொழுது நபி (ஸல்) அவர்கள் ஆற்றிய பேருரை வரலாற்றுச் சிறப்பு மிக்கதாகும். அப்பொழுது நபி (ஸல்) அவர்களுடன் ஒன்பது மனைவி மார்களும், ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்களும் சென்றார்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களால் எமன் நாட்டிற்கு அனுப்பப்பட்ட ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் மக்காவில் வந்து நபியவர்களுடன் ஹஜ் செய்ய சேர்ந்து கொண்டார் கள்.

அப்பொழுது, நபி (ஸல்) அவர்கள் உடன் வந்திருந்தோரை நோக்கி,

''எவரிடம் குர்பானி செய்யப் பிராணி இல்லையோ அவர் இஹ்ராம் உடையைக் களைந்து விட்டு, ஹஜ்ஜை உம்ராவாக மாற்றிக் கொள்ள வேண்டும்'' என்று கூறினார்கள்.

ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களோ எமன் நாட்டிலிருந்து ஒட்டகங்களைக் கொண்டு வந்திருந்தனர். ஆனால்

நபிகளாரின் மனைவிமார்களிடமும், ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்களிடமும் குர்பானி செய்யப் பிராணி இல்லை.

அதனால் பாத்திமா (ரலி) அவர்கள் இஹ்ராம் உடையைக் களைந்து விட்டு, சாதாரண வண்ண ஆடையை அணிந்து கொண்டார்கள். அது கண்ட அலீ (ரலி) அவர்கள் வெறுப்புற்றார்கள். ஆனால் பாத்திமா (ரலி) அவர்களோ, தந்தையார் கூறியதற்கிணங்கியே இஹ்ராம் ஆடையை கழற்றியதாகக் கூறினார்கள்.

இந்த ஹஜ்ஜை முடித்துக் கொண்டு நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்குத் திரும்பும் வழியில் கதீர் என்னுமிடத்தில் லுஹர் தொழுகையினைத் தொழுதார்கள். பின்னர் கூடியிருந்த மக்களை நோக்கி உரை நிகழ்த்தினார்கள்.

''இங்கு கூடியிருக்கும் மக்களே! நான் ஒரு மனிதனே என்பதைப் புரிந்து கொள்வீர்களாக! நான் உங்களுக்கிடையில் இரண்டு பொருள்களை விட்டுச் செல்கிறேன். ஒன்று இறைமறை, மற்றொன்று என் வழி (சுன்னத்) என் வீட்டாரைப் பற்றியும் உங்களுக்கு நான் நினைவுறுத்துகிறேன்.'' என்றனர்.

## 37. அண்ணலாருக்குக் காய்ச்சல்

ஹிஜ்ரீ 11-ஆம் ஆண்டு, ஸபர் மாதத்தின் இறுதியில் ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் இல்லத்திற்கு வந்து உரையாடிக் கொண்டிருக்கும் பொழுதே அவர்களுக்கு தலைவலி ஏற்பட்டது. அத்துடன் கடுமையான காய்ச்சலும் ஏற்பட்டது. உடனே அவர்கள் படுக்கையில் படுக்கும் நிலை ஏற்பட்டது.

மறுநாள் அவர்கள் உடல் சூடாய் இருக்கும் நிலையிலேயே, அன்னை மைமூனா (ரலி) அவர்களின் இல்லத்திற்குச் சென்றார்கள்.

நபி (ஸல்) அவர்களுக்குக் காய்ச்சல் என்பதைக் கேள்வியுற்ற நபிகளாரின் இதர மனைவிமார்களும் அங்கு வந்து குழுமி விட்டார்கள்.

ஒவ்வொரு நாளும் முறை வைத்து ஒவ்வொரு மனைவி வீட்டிற்கும் நபியவர்கள் சென்று தங்கி வருவது வழக்கமாகும்.

இப்பொழுது அவர்களுக்கு உடல் நிலை மிகவும் பாதிக்கப்பட்டிருப்பதால், அவர்களால் முன் போன்று ஒவ்வொரு மனைவிமாரின் இல்லத்திற்கும் சென்று வர இயலாது என்பதை மனைவிமார்களே விளங்கிக் கொண்டனர்.

அப்பொழுது நபி (ஸல்) அவர்கள், தங்களைச் சூழ்ந்து இருந்த மனைவியரைப் பார்த்து, இனி நான் எவருடைய இல்லத்தில் தங்கியிருக்க வேண்டும் என்று நீங்கள் எண்ணுகிறீர்கள்? என்று கேள்வி எழுப்ப, உடனே மனைவிமார்கள் நோய் குணமடையும் வரை அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் இல்லத்திலேயே தங்கியிருக்க அனுமதி வழங்கினர்.

அதன் பின்னர் நபியவர்கள், ஹஜ்ரத் அலீ (ரலி), ஹஜ்ரத் அப்பாஸ் (ரலி) ஆகியோரின் தோள் மீது கை போட்டவர்களாக அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் இல்லத்திற்கு வந்து சேர்ந்தனர்.

நோயின் வேளையிலும், பள்ளிக்குச் சென்று கூட்டுத் தொழுகையில் அவர்கள் கலந்து கொண்டனர். எனினும் ஒரு நாள் அவர்களால் எழவோ, உட்காரவோ முடியாத நிலை ஏற்பட்டது. காய்ச்சலும் கடுமையாக இருந்தது.

மற்றொரு நாள் நபி (ஸல்) அவர்கள் பள்ளியில் தொழுதபின்னர் ஒரு சிறு சொற்பொழிவாற்றினார்கள்:

''இவ்வுலக இன்பங்களையோ, அல்லது தன்னிடம் உள்ள நற்பேறுகளையோ தேர்ந்தெடுத்துக் கொள்ளுமாறு இறைவன் தன் அடியாரிடம் கூறினான். அந்த அடியாரோ,

இரண்டாவதையே தேர்ந்தெடுத்துக் கொண்டார்'' என்று அப்பொழுது கூறினார்கள்.

அதுகேட்டு ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் அழுது விட்டார்கள். அவர்களின் அழுகைக்கான காரணம் யாதென விளங்காமல் மற்ற நபித் தோழர்கள் திகைத்தார்கள்.

நபி (ஸல்) அவர்களோ, அபூபக்கர் (ரலி) அவர்களை அழவேண்டாமென சாடை செய்தார்கள்.

பின்னர் மக்களை நோக்கி,

''எவருடைய பொருளுக்கேனும், நட்புக்கேனும் நான் மிகவும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன் என்றால் அது அபூபக்கரின் பொருளுக்கும் நட்புக்கும்தான். பள்ளி வாசலுக்கு அபூபக்கர் வரும் வாயிலைத் தவிர்த்து மற்ற எல்லா வாயிலையும் மூடிவிடுங்கள். உங்கள் முன்னோர் தங்கள் பெரியார்களின் அடக்கவிடங்களை வணக்கத்திற் குரிய இடங்களாக ஆக்கிக் கொண்டது போல் நீங்களும் செய்யக் கூடாதென நான் உங்களை எச்சரிக் கிறேன்''. என்று கூறினார்கள்.

இதன் பின்னர் தங்களின் இறுதி நேரம் நெருங்குவதை அறிந்து கொண்ட அவர்கள், மறுமை வீட்டிற்குச் செல்லத் தேவையான ஏற்பாடுகளைச் செய்யத் துவங்கினர்.

## 38. தந்தையை இழந்தார்

• காய்ச்சலாலும், ஓயாத தலைவலியாலும் நபி (ஸல்) அவர்கள் மிகவும் வேதனைப்பட்டார்கள். நோய் ஏற்பட்டு இரண்டு வாரங்களாகியும், நோயின் வன்மை குறையவே இல்லை.

அருமை மகளார் பீபீ பாத்திமா (ரலி) அவர்கள் தந்தையாரின் அருகமர்ந்து அழுத வண்ணமிருந்தார்கள். அப்பொழுது அவர்களுடன் பிள்ளைகளான ஹஸன் (ரலி), ஹுஸைன் (ரலி) ஆகியோரும் வந்திருந்தனர்.

நபி (ஸல்) அவர்கள், அப்பொழுது தம் அருமை மகளாரை தங்களின் அருகில் அழைத்து நெஞ்சோடணைத்து, அவர்களின் காதில் ஏதோ இரகசியமாகக் கூறினார்கள். அதுகேட்ட பாத்திமா (ரலி) அவர்கள் கோ வெனக் கதறி அழுதார்கள்.

பின்னர் நபியவர்கள் மீண்டும் மகளாரின் காதில் ஏதோ கூறினார்கள். அதுகேட்ட பாத்திமா (ரலி) அவர்கள் மகிழச்சியுற்றார்கள்.

பின்னர், அங்கிருந்து அவர்கள் தங்களின் இல்லத்திற்குச் செல்ல முற்பட்ட பொழுது, அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள், ''பாத்திமா நீர் அழுததிலும், சிரித்ததிலும் உள்ள இரகசியம் என்ன?'' என்று கேட்டார்கள்.

''அண்ணலார் கூறிய இரகசியத்தை நான் வெளிப்படுத்த மாட்டேன்'' என்று பாத்திமா (ரலி) அவர்கள் கூறிவிட்டார்கள்.

ஆயிஷா (ரலி) அவர்களிடம் ஏழு தீனார் இருப்பது அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு இப்பொழுது நினைவிற்கு வந்தது. உடனே அதனை ஏழைகளுக்கு சதகா செய்து விடுமாறு அவர்கள் பணித்தனர்.

அன்னையவர்களும் அவ்வாறே செய்தனர்.

கபவாத நோயால் அவதியுற்ற அவர்களுக்கு நபிகளாரின் குடும்பத்தினர் மருந்து தயாரித்துத் தந்தனர். ஆனால் நபி (ஸல்) அவர்களோ, தங்களின் இறுதி நேரம் இதுதான் என்றறிந்திருந்தமையால் மருந்தை உட்கொள்ள மறுத்து விட்டனர்.

எனினும் அவர்களின் குடும்பத்தினர் நபியவர்கள் மயக்க நிலையில் இருக்கும் பொழுது மருந்தினை வாயில் திணித்தனர். மயக்கம் தெளிந்த நபியவர்கள், மருந்தைத் திணித்தவர்கள் மீது சினமுற்றனர்.

ஹிஜ்ரீ 11-ஆம் ஆண்டு, ரபீவுல் அவ்வல் மாதம் 12-ஆம் நாள் கி.பி. 632-ஆண்டு திங்கட்கிழமை.

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் உடல் நிலை மோசமாக இருந்தது. அடிக்கடி அவர்கள் மயக்கமுற்றார்கள்.

ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் மகனார் அப்துர்ரஹ்மான் (ரலி) அவர்களின் கையிலிருந்த மிஸ்வாக்கை நபியவர்கள் கூர்ந்து கவனித்தார்கள்.

அதனை விளங்கிக் கொண்ட ஆயிஷா (ரலி) அவர்கள் தம்முடைய சகோதரரின் கையிலிருந்த அந்த மிஸ்வாக்கை வாங்கித் தம் பற்களால் கடித்து மிருதுவாக்கி அண்ணலாரிடம் கொடுத்தார்கள்.

அதனை வாங்கி நபி (ஸல்) அவர்கள் பல்துலக்கி பின்னர் அங்கிருந்த தண்ணீர் பாத்திரத்தில் கைகளை விட்டு அவற்றைத் தங்களின் முகத்தில் பலமுறை தடவிக் கொண்டனர்.

அப்பொழுது அவர்களின் வாயிலிருந்து,

''அல்லாஹ்வைத் தவிர வேறு நாயனில்லை; இறப்பிற்குப் பிறகு நிச்சயமாகப் பல வேதனைகள் இருக்கின்றன'' என்னும் சொற்கள் வெளிவந்து கொண்டிருந்தன.

பின்னர் தம் அருமை மகள் பாத்திமா (ரலி) அவர்களை நோக்கி, ''மகளே! உறவைப் போக்கி விடுவதும், ஆசைகளைத் தகர்த்தெறிவதும், இனத்தைப் பிரித்து விடுவதும், மனைவிகளை விதவைகளாக்கி விடுவதும், மக்களை அனாதைகளாக்கி விடுவதுமான மரணம் இதுவே!'' என்றனர்.

அதுகேட்டு பாத்திமா (ரலி) அவர்கள் அழலாயினர். நபி (ஸல்) அவர்கள் தங்களின் திருக்கரத்தால் மகளாரின் கண்ணீரைத் துடைத்து விட்டு பேரர்களான ஹஸன், ஹுஸைன் ஆகிய இருவரையும் அழைத்து முத்தமிட்டு, தங்கள் மனைவியரை அழைத்து அவர்களுக்கு அறிவுரைகள்

கூறிய பின்னர், ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களைத் தம்மருகே அழைத்தனர்.

பின்னர் அவர்களின் மடியில் தலை வைத்த வண்ணம் அலீ (ரலி) அவர்களின் முகத்தை தம் கையால் தடவியவாறு,

''அடிமைகள் பொருட்டு அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ள வேண்டும்; அவர்களுக்கு தாராளமாக உணவும் உடைகளும் வழங்கி வர வேண்டும். அவர்களிடம் மென்மையாக நடந்து கொள்ள வேண்டும்'' என்று கூறிய பின்னர், ''பொறுமையை மேற்கொள்ளுங்கள்'' என்றார்கள்.

பின்னர் அலீ (ரலி) அவர்கள் வெளியிற் சென்றார்கள். இப்பொழுது நபியவர்களின் தலை ஆயிஷா (ரலி) அவர்களின் தொடை மீதிருந்தது,

அனைவருக்கும் தொழுகையைப் பற்றி எச்சரிக்கை செய்த வண்ணமிருந்தார்கள்.

அவர்களின் கண்கள் சுழன்றன.

''மேன்மை மிக்க நண்பனிடம் செல்கிறேன்'' என்ற வாசகத்தை அவர்கள் திரும்பத் திரும்பக் கூறி கொண்டிருந்தார்கள்.

இடையே, திடீரென அந்த வாசகம் தடைப்பட்டது. அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் நபியவர்களைக் கூர்ந்து கவனித்தார்கள். அவர்களின் கண்களும், வாயும் இறுக மூடிக் கொண்டிருந்தன.

ஆம்! அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இவ்வுலகை நீத்து மறுமையின் பயணத்தைத் தொடங்கி விட்டார்கள்.

இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிவூன்.

## 39. வாரிசு உரிமை

இஸ்லாமியப் போரின் வெற்றிகளின் பொழுது கிடைக்கும் சிறைப் பொருள்கள் ஐந்து பாகங்களாகப் பிரிக்கப்பட்டால் அதில் ஒரு பகுதி நபி (ஸல்)

அவர்களுக்கும் மற்ற நான்கு பகுதிகள் இறைப்பாதையில் போரிட்ட வீரர்களுக்கும் சேரும்.

ஆனால், போரில்லாமலும், நன்கொடை மூலமாகவும் நபியவர்களுக்குக் கிடைத்த சொத்துக்கள் ஃபய் எனப்படும். இது நபியவர்களுக்குச் சொந்தமானதாகும். இது ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு அதில் நான்கு பகுதிகளை நபி (ஸல்) அவர்கள் தங்களுக்காக வைத்துக் கொண்டு, எஞ்சிய ஒரு பகுதியை தங்கள் உறவினர்களுக்கும், ஏழை அனாதை களுக்கும், வழிப்போக்கர்களுக்கும் செலவிட்டார்கள்.

ஒரு யூதர் முஸ்லிமாகி ஏழு தோட்டங்களை நபியவர்களுக்கு அன்பளிப்பு செய்து விட்டு இறந்தார். நுலைர் பகுதியும், ஃபிதக் பகுதியும் சமாதான அடிப்படை யில் போரின்றியே நபியவர்களுக்கு கிடைத்தவைகளாகும். மேலும் அன்சார்கள் ஹிபா என்னும் நன்கொடையாகக் கொடுத்த நிலங்கள் அனைத்தும் நபி (ஸல்) அவர்களுக்குச் சொத்துக்களாக இருந்தன.

ஒரு முறை நபி (ஸல்) அவர்களின் மறைவிற்கு முன்னர், அலீ (ரலி) அவர்களின் வேண்டுகோளுக் கிணங்கி, ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள் தந்தையாரிடம் வந்து, ஃபிதக் என்ற பகுதியை நன்கொடை என்ற வகையில் தமக்குத் தருமாறு கோரிக்கை விடுத்தனர்.

ஆனால் தம் அருமை மகளாரின் கோரிக்கையை நபி (ஸல்) அவர்கள் நிராகரித்து விட்டனர்.

ஏன் நிராகரித்தனர் என்றால், ஒரு நாட்டின் அரசியல் தலைவருக்கு ஒரு சொத்து தானமாக அல்லது நன்கொடையாக வழங்கப்பட்டால் அவருடைய சொத்தாக ஆகாது. அது பொதுச் சொத்தாகவே கணிக்கப்படும் என்பதால்.

ஃபய் அடிப்படையில் தங்களுக்கு ஏராளமாக தோட்டங்களும், நிலங்களும், கிராமங்களும் கிடைத்த போதினும், அதனைத் தங்களின் சொந்தச் செலவிற்காக நபி

(ஸல்) அவர்கள் பயன்படுத்திக்கொள்ளவே இல்லை. மேலும், ''இறைத்தூதர்களுக்கு வாரிசு கிடையாது'' என்றும் நபி (ஸல்) அவர்கள் கூறினர்.

ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் அறிவிப்பதாவது:

(நபிமார்களாகிய) எங்களிடமிருந்து (எவருக்கும்) வாரிசு சொத்துரிமை கிடையாது. நாம் விட்டுச் செல்வதெல்லாம், சதகா என்னும் தான தர்மம் ஆகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினர்.

நபி (ஸல்) அவர்கள் இவ்வுலகை விட்டு மறைந்த பின்னர், முதலாம் கலீபா அபூபக்கர் (ரலி) அவர்களிடம் ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள், ஃபிதக், கைபர் நிலங்கள் ஆகிய தங்களின் தந்தையாருக்குச் சொந்தமான பகுதிகளைத் தமக்குத் தர வேண்டுமென கேட்டார்கள்.

அவை பொதுச் சொத்துக்களாக பெருமானார் (ஸல்) அவர்கள் கணித்துச் சென்றபடியால் அதில் வாரிசுகள் உரிமை கொள்ள முடியாது. மேலும. நபிமார்களுக்கு வாரிசு கிடையாது என்னும் அடிப்படையிலும் ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் தூய வழி முறையினைப் பின்பற்றி பீபீ பாத்திமா (ரலி) அவர்களின் கோரிக்கையை நிராகரித்தார்கள்.

அவர்கள் கூறினார்கள், நபிமார்கள் விட்டுச் செல்லும் சொத்துக்கள் யாவும் ஸதகா ஆகும். அவற்றை வாரிசுகள் கேட்க உரிமை கிடையாது. நபியவர்களின் காலத்தில் இதிலிருந்து கிடைக்கும் வருமானத்தில் எவ்வளவு தரப்பட்டதோ அது இப்பொழுதும் தரப்படும்.

கலீபா அபூபக்கர் (ரலி) அவர்களின் தீர்ப்பைக் கேட்ட பாத்திமா (ரலி) அவர்களுக்கு மனவருத்தம் ஏற்பட்டது. எனினும் அவர்கள் மறுபேச்சு எதுவும் பேசவில்லை.

பின்னர், ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் ஒருமுறை ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களிடம் சென்று

''நபிகளாரின் மகளாரின் பங்கை என்னிடம் தரவேண்டும்'' என்று கேட்டார்கள்.

பீபீ பாத்திமா (ரலி) அவர்களுக்குக் கூறிய பதிலையே கலீபா அவர்கள் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களுக்கும் கூறினர். அவர்களும் வேறு வழியின்றித் திரும்பி விட்டனர்.

## 40. ஏக்கம்

ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள் தங்களின் அருமைத் தந்தையார் மீது பேரன்பு பூண்டிருந்தனர் என்பதனை முன் வந்த நிகழ்ச்சிகள் மூலம் அறிந்தோம்.

இப்பொழுது தந்தையாரின் இறப்பு அவர்களை ஒரு நடைப்பிணம் போலாக்கி விட்டிருந்தது. எதிலும் ஈடுபாடில் லாதவர்களாக, மறுமையின் சிந்தனையில் முற்றிலும் மூழ்கியவர்களாக அவர்கள் மாறிவிட்டிருந்தார் கள். தம்முடைய உள்ளத்தில் இருந்த ஆழமான வேதனையை அமுக்கி அமுக்கி வைத்ததால் அவர்களின் கண்கள் கண்ணீரை பீறிட்டு வெளியாக்கின.

இப்பொழுதெல்லாம் பாத்திமா (ரலி) என்றால் சோகம், அழுகை என்று பொருள் என்று மக்கள் எண்ணுமளவிற்கு அவர்களின் நிலை மாறிவிட்டிருந்தது.

அன்று உஹத் களத்திலே, நபி (ஸல்) அவர்கள் இறந்து விட்டார்கள் என்ற வதந்தி, வேகமாகப் பரவிக் கொண்டிருந்தது.

நபியவர்களின் மகள்களான ஜைனப், உம்மு குல்தூம், பாத்திமா (ரலி) ஆகிய மூவரும் மதீனாவில் இருந்த பொழுது, அன்னை பாத்திமா (ரலி) அவர்கள் மட்டுமே போர்க்களத்திற்கு ஓடினார்கள் தந்தையைக் காண.

களத்தில் கண்டபொழுது, தந்தையாரின் கன்னங் களிலும், மூக்கிலும் காயங்கள்; அவற்றிலிருந்து குருதி வடிந்து கொண்டிருந்தது.

அப்பொழுது ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் விரைந்து சென்று தம்முடைய கேடயத்தில் நீர் கொண்டு வந்தார்கள். உடனே மகளார், தந்தையின் காயங்களைக் கழுவினர்.

எனினும் இரத்தம் வருவது நிற்கவில்லை. பிறகு அவர்கள் பாயின் ஒரு துண்டை எரித்து அதன் சாம்பலை காயத்தின் மீது வைத்து அழுத்தவே இரத்தம் வருவது நின்றது.

இவ்வாறு அன்னை பாத்திமா (ரலி) அவர்கள் தங்களின் தந்தையாருக்கு ஏதேனும் தீங்கு என்றறிந்தால் அது கண்டு பதறினார்கள். இன்று முழுமையான இழப்பு அவர்களுக்கு ஏற்பட்டிருந்தது. ஈடு செய்ய முடியாத இந்த இழப்பு அவர்களை ஓர் ஊமையாக ஆக்கி விட்டிருந்தது.

அண்ணலாரின் மறைவிற்குப் பின்னர் ஒரு நாள் ஆயிஷா (ரலி) அவர்கள், பாத்திமா (ரலி) அவர்களை, அண்ணலார் இறப்பதற்கு முன்னர் கூறிச் சென்ற இரகசியம் என்ன? என்று கேட்டனர்.

கண்ணே பாத்திமா! உம்முடைய மாற்றாந்தாய் என்ற வகையில் எனக்கு உரிமை இருக்கிறது. அதே உரிமையில் உம்மிடம் நான் கேட்கிறேன். அன்று நபி (ஸல்) உம்முடைய காதில் கூறிச் சென்ற இரகசியம் என்ன? .

அது கேட்ட பாத்திமா (ரலி), அதைச் சொல்வதற்கு இதுதான் தருணம். முதலில் எனது தந்தையார் விரைவில் இவ்வுலகைவிட்டு நீங்குவதாகக் கூறினர். அது கேட்டு அழுதேன்; அடுத்து நம் குடும்பத்தவருள் முதலாவதாக நான்தான் அவர்களைச் சென்று சந்திப்பேன். மேலும் நான் சுவனத்துப் பெண்களுக்குத் தலைவியாய் இருப்பேன் என்று கூறினார்கள். அது கேட்டு மகிழ்ச்சியால் சிரித்தேன் என்று கூறினார்கள்.

நபியவர்கள் மகளாரிடம் கூறிச் சென்றது உண்மையாகும் காலம் நெருங்கி வந்தது.

# 41. இறப்பு

. அன்னை பாத்திமா (ரலி) அவர்களுக்கு வயது இருபத்தொன்பது. இதற்கு முன்னர் அவர்களின் மூன்று மூத்த சகோதரிகளும் இளம் வயதிலேயே காலமாகிவிட்டனர். அதே போன்று பாத்திமா (ரலி) அவர்களுக்கும் மரணவேளை நெருங்கிக் கொண்டிருந்தது.

நெடுநாட்களாக அவர்கள் படுக்கையில் நோயாளியாக இருக்கவில்லை. எனினும் அவர்கள் நோயுற்றிருந்த பொழுது அபூபக்கர் (ரலி) அவர்களின் மனைவி அஸ்மா பின்த் உமைஸ் (ரலி) அவர்கள் அன்னை பாத்திமா (ரலி) அவர்களுக்கு உதவிகளைச் செய்து கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது அஸ்மாவைப் பார்த்து, அவர்கள் ''நான் இருக்கும் நிலையைக் காண்கிறீர்'' என்று கூறினார்கள். அதன் பொருளாவது மரண வேளை நெருங்கிக் கொண்டுள்ளது என்பதாகும்.

பிறகு பெண்களுக்கு சந்தூக் (ஜனாஸா பெட்டி) எவ்வாறிருக்க வேண்டும் என்பது பற்றி இருவரிடையே பேச்சு வந்தது.

அஸ்மா பின்த் உமைஸ் (ரலி) அவர்கள் தம்முடைய முதல் கணவருடன் அபிசீனியாவில் இருந்தவர். அங்கு ஜனாஸாப் பெட்டியின் அமைப்பு எவ்வாறிருந்தது என்பது பற்றி பாத்திமா (ரலி) அவர்களிடம் கூறினார்கள்.

பின்னர் அதன் அமைப்பை செய்தும் காட்டினார்கள். ஒரு கட்டில் கொண்டுவரப்பட்டது. பின்னர் பேரீச்சம் மரத்தின் மட்டைகள் கொண்டு வரப்பட்டு, அவற்றை ஒழுங்காகப் பிளந்து, சீவி, அரை வட்ட வடிவம் போல் வளைத்து, அதன் இரண்டு முனைகளையும் கட்டிலின் இருபுறங்களில் இருப்பது போன்று அமைக்கப்பட்டது. இதனை அஸ்மா (ரலி) அவர்களே செய்து காட்டினர்.

அப்பொழுது பாத்திமா (ரலி) அவர்கள், இது சிறந்த முறை; இவ்வாறே எனது ஜனாஸாவையும் எடுத்துச் செல்ல வேண்டும் என்று தங்களின் இறுதி விருப்பத்தைத் தெரிவித்தார்கள்.

பின்னர் இந்த ஜனாஸாப் பெட்டி அமைப்பைப் பார்த்து அவர்கள் புன்முறுவல் பூத்தார்கள். நபியவர்களின் மரணத்திற்குப் பின்னர் அவர்கள் சிரிப்பது அதுவே முதல் முறையாகும்.

பின்னர் பாத்திமா (ரலி) அவர்கள் தங்கள் கண்மணிகளாம் ஹஸன், ஹுஸைன் இருவரையும் தம் அருகில் அழைத்து கொண்டு, தந்தையாரின் கப்ருக்குச் சென்றார்கள். அவர்களால் நடக்க இயலவில்லை. காற்றிலாடும் நாணலாய் இருந்தது அவர்களின் உடல். கப்ரருகே நின்று கண்ணீர் விட்டழுதார்கள். துஆ இறைஞ்சி விட்டு இல்லம் மீண்டார்கள்.

பின்னர் பிள்ளைகளை கணவரிடம் சென்று இருக்கு மாறு கூறிவிட்டு குளிக்கச் சென்றார்கள். குளிப்பு முடிந்ததும் படுக்கைக்குச் சென்று படுத்துக் கொண்டார்கள்.

தாயாரைக் காணாது தவித்தனர் பிள்ளைகள், அம்மா எங்கே? அம்மா எங்கே? என்றனர் அறியாப் பருவத்தினராம் அழகுபாலகர்கள் ஹஸனாரும், ஹுஸைனாரும். பின்னர் அவர்கள் அறைக்குள் சென்று பார்த்த பொழுது அன்னை பாத்திமா (ரலி) அவர்களின் உடலை விட்டு அவர்களின் தூய ஆவி பிரிந்து விட்டிருந்தது.

இன்னா லில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன்

அங்கு வந்த அஸ்மா (ரலி) அவர்கள் கோ வெனக் கதறினார்கள்.

செய்தியறிந்த கணவர் அலீ (ரலி) அவர்கள் அறைக்குள் வந்து பார்த்த பொழுது, அவர்களின் முகமே வெளிறிப் போயிற்று, தாயை இழந்த பிள்ளைகள்

தந்தையின் முகத்தையும், தாயின் முகத்தையும் மாறிப் மாறிப் பார்த்து அழலாயினர்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மறைந்து ஆறுமாதமே ஆகியிருந்தது. ஹிஜ்ரீ 11 (கி.பி. 633) இல் அன்னை பாத்திமா (ரலி) அவர்கள் அருமைத் தந்தையாரை இழந்த ஏக்கத்திலேயே மூழ்கியிருந்து உண்ணாமலும், உறங்காமலும், நடக்க இயலாத நிலையிலும் ஆகி உயிர் துறந்தார்கள்..

அவர்களின் ஜனாஸா நல்லடக்கம் இரவு வேளையில் நடந்தது. அது பாத்திமா (ரலி) அவர்களின் வேண்டு கோளாக இருந்தமையால் அவ்வாறு செய்யப்பட்டது. இரவு வேளையாக இருந்தமையால் அதிகம் பேர் ஜனாஸாத் தொழுகையில் கலந்து கொள்ளவில்லை.

அவர்களின் ஜனாஸாத் தொழுகையை ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் நடத்தி வைத்ததாகவும், ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் நடத்தி வைத்ததாகவும் இருவிதமாகக் கூறப்படுகிறது.

அவர்களின் ஜனாஸா 'ஜன்னத்துல் பகீ' என்ற இடத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

அன்பு வாழ்வே பண்பு வாழ்வே
அரிய வாழ்வே பெரிய வாழ்வே
துன்ப வாழ்வில் இன்ப வாழ்வை
துலக்க வந்தீர் பாத்திமா!

## 42. பாத்திமா (ரலி)வின் சிறப்புகள்

அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''பாத்திமா என் இதயத்தின் துண்டு'' என்று கூறினார்கள்.

மேலும் அவர்கள், எவர் பாத்திமாவை மகிழ்விப்பாரோ அவர் என்னை மகிழ்விப்பவர் போலாவார். எவர் என்னை மகிழ்விப்பாரோ அவர் இறைவனை மகிழ்விப்பவராவார் என்று கூறினர்.

ஒரு முறை மக்கள் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து "அல்லாஹ்வின் தூதர் அவர்களே! தங்களின் உறவினர்கள் யார்? அவர்கள் மீது அன்பு செலுத்த வேண்டியது எங்கள் மீது கடமையா?" என்று வினவ, அதற்கு நபி (ஸல்) அவர்கள், அலீயும், பாத்திமாவும், என் இரு பேரர்களும் (ஹஸனும், ஹுஸைனும்) என்று கூறினர்.

தந்தையார் இறந்ததை பாத்திமா (ரலி) அவர்களால் தாங்கிக் கொள்ளவே இயலவில்லை. துக்கம் தாளாது இரவு பகலாக அழுதார்கள்.

அதைக் கண்ட நபித்தோழர்கள், இவ்வாறு இரவும் பகலும் அழுதால் என்னாவது? ஒன்று பகலில் அழுங்கள், இன்றேல் இரவில் அழுங்கள் என்றனர்.

உலகில் மிகவும் அழுதவர்கள், ஆதம் (அலை), நூஹ் (அலை) யஃகூப் (அலை), யூசுப் (அலை), ஷுஐப் (அலை), தாவூது (அலை), ஜைனுல் ஆபிதீன் (ரஹ்) ஆகிய ஏழு பேராவர். அன்னை பாத்திமா (ரலி) அவர்கள் எட்டாமவராக இருக்கின்றனர் என்று கூறப்படுகிறது.

இனிய இயல்புடைய அவர்கள், சபைகளின் நடுவில் அமரமாட்டார்கள்; பெண்களே முழுவதும் இடம் பெற்ற சபைகளில் கூட ஓர் ஓரத்தில் அல்லது மூலையில் போய் அமருவதுதான் அவர்களின் வழக்கம்.

சுவனத்துப் பெண்களில் மேலானவர்கள் நால்வர். அவர்கள் அன்னை பாத்திமா (ரலி), அன்னை கதீஜா (ரலி), அன்னை ஆசியா, அன்னை மர்யம் ஆகியோர் எனக்கூறப்படுகிறது. நால்வருள் பாத்திமா நாயகியே தலை சிறந்தவர்கள் என்றும், பெண்களில் முதன் முதலில் அவர்களே சுவனம் புகுவர் எனவும் கூறப்படுகிறது.

பாத்திமா (ரலி) அவர்களுக்கு "காத்தூனே ஜன்னத்",

''சுவனத்துப் பேரரசி'' என்ற பெயரும் உண்டு.

ஹஜ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள் இறந்தபின்னர் ஒருவர் அலீ (ரலி) அவர்களிடம் வந்து, ''நபிகளாரின் மகளார் எப்படிப் பட்டவராக நடந்து கொண்டார்'' என்று வினவ,

அதற்கு அலீ (ரலி) அவர்கள், ''வாடிய பின்னரும், மணம் கொடுக்கும் ஒரு மலராக அவர்கள் இருந்தார்கள்'' என்று மிகச் சிறப்பாகக் கூறினர்.

ஐங்காலத் தொழுகைகளைப் பேணுதலாகத் தொழுது வந்த பாத்திமா (ரலி) அவர்கள், தஹஜ்ஜுத் தொழுகையை விடாது தொழக் கூடியவர்களாயிருந்தனர்.

அவ்வாறு தொழுத பின்னர் தமக்காக துஆச் செய்து கொள்ளவே மாட்டார்கள். அவர்களின் இறைஞ்சுதல் பிறருக்காகவே இருக்கும்.

அது கண்டு அவர்களின் மகனார் ஹஜ்ரத் ஹஸன் (ரலி) அவர்கள் ஒரு நாள் அம்மா! எல்லோருக்காகவும் துஆ கேட்கும் தாங்கள் உங்களுக்காக எதனையும் கேட்டுக் கொள்வதில்லையே! என்று வினவ, அதற்கு அந்த உத்தமத் தாயார், முதலில் பக்கத்து வீட்டினருக்காகவும், பிறகு நமக்காகவும் துஆச் செய்ய வேண்டும் என்று கூறினர்.

அன்னை பாத்திமா (ரலி) அவர்களின் சோக வரலாறு அகிலத்துப் பெண்கள் அனைவருக்குமே முன்மாதிரியாகும்.

அவர்கள், தந்தையாரிடம் கொண்ட பேரன்பு, கணவரிடம் காட்டிய மரியாதை, அக்கம் பக்கத்தவரிடம் பழகிய முறைகள், கடுமையான வீட்டு வேலைகளைக் கனிவுடனே மேற்கொண்ட விதம் ஆகியயாவும், உலக முடிவு நாள் வரை முஸ்லிம் பெண்களனைவரும் பின்பற்ற

வேண்டிய நேரிய வழிமுறைகளாகும்.

உபதேசம் அவர்களுக்குத் தேவைப்படாமலேயே இருந்தது. காரணம் இயல்பிலேயே அவர்கள் ஒழுக்கத்தின் உயர்விடமாகவும், அடக்கத்தின் அணிகலனாகவும் திகழ்ந்தார்கள்.

அந்தப் புனிதவதியின் பெயரை உச்சரிக்கும் நம் பெண்கள், அவர்கள் வாழ்ந்த முறையினைப் பின்பற்ற முன்வர வேண்டும். இன்றேல் அந்த அற்புதத்தாயின் பெயர் சொல்லக்கூட அவர்களுக்கு அருகதை கிடையாது என்பதை அறுதியிட்டுக் கூறலாம்.

வல்ல அல்லாஹ் நம் பெண்களனைவருக்கும் பார் போற்றும் உத்தமத் தாயாம் அன்னை பாத்திமா (ரலி) அவர்களின் வழியொற்றி நடந்தேகும் நற்பேற்றை நல்குவானாக ஆமீன்.

இன்முகத்தார்
எழில் முகத்தார்
இறைவன் திருப்
பொருத்தமதை
ஏற்றவரே பொன்முகத்தார்
பெண் முகத்தார்
பண் முகத்தார்
புல்லினமும்.
பூவினமும்.
போற்றுகின்ற பூமுகத்தார்!
பாத்திமத் துஜ்ஜொஹ்ராவெனும் பெண்ணே!
பாரனைத்தும் பேரெடுத்த கண்ணே!



